மக்கள் கண்ணாடிக் குப்பிகளில் கள்ளை வைத்தனர். குளிர்காலத்தில் உண்ணும் பொருட்டு வெந்நீரை ஆறுமற் பாதுகாத்து வைத்தற்குரிய செப்பொன்றிருந்தது. அது சேமச்செப்பு என்று சொல்லப்படுகின்றது. குறிய கால்களையுடைய கட்டிலும், அதன் மேல் நூலால் தொடுக்கப்பட்ட பூமாலைகள் மலர்கள் அணைகளென்பவை செறிந்த படுக்கையும் செல்வர் வீடுகளில் அமைந்திருந்தன.

## ஊர்திகள்

வாகனங்களுள் உப்பு வாணிகருடைய மூடா வண்டிகள் ஒருசார் காணப்படுகின்றன. வீரரும் பிறரும் ஊரும் தேர்கள் ஒருபால் உள்ளன. வெள்ளிய தந்தத்தாற் செய்யப்பட்ட தேர்கள் சிறந்த குதிரைகள் பூட்டப்பெற்று நிற்கின்றன. தேரின் பக்கங்களில் பொன்னாற்செய்த தகடுகள் தைக்கப்பட்டும், முன்னே தாமரை மொட்டுப்போன்ற வடிவமுள்ள கொடுஞ்சி அமைக்கப்பட்டும் உள்ளன. வேறு பல வகையான அலங்காரங்களையும் இழைகளையும் அத்தேரிற் காண்கின்றோம். அதன் சக்கரங்களிற் கூடப் பொன்னாலாகிய சூட்டு இருக்கின்றது. தேர் வரும்போது அதிற்கட்டப்பெற்ற மணிகள் ஒலிக்கின்றன.

நீரில் விளையாடுதற்குரிய புணைகளும், கடலிற் செல்லுதற்குரிய திமிலும், கலமும் (கப்பலும்) சொல்லப்படுகின்றன. ஒரு மலை மாலைப்பொழுதில் இருளில் மறைவதற்கு உவமையாகக் கப்பல் கடலில் ஆழ்வதை ஒரு புலவர் கூறுதலின் கப்பல் பெரியதாக இருக்கவேண்டுமென்று தெரியவருகின்றது.

## உணவு வகை

தேவர்களுடைய உணவாகிய அமிழ்தமே யாவற்றினும் சிறந்ததென்ற நினைவு அக்காலத்தும் இருந்தது. அதனை அரும்பெறலமிழ்தம் என்று குறிக்கின்றனர். வயிறாரச் சுவைத்துண்ணும் உணவை ஆர்பதமென்றும், வைத்திருந்து விலங்குகள் உண்ணும் உணவை அல்கிரையெனவும், காக்கைக்கிடுவதைப் பலியெனவும், கடவுளுக்கு நிவேதிப்பதை மடையெனவும் கூறுவர். பாலும் நெய்யும் கலந்த உணவுகள் பல சொல்லப்படுகின்றன. கதிரிலுள்ள பச்சை நெல்லைக்கொண்டு இடிக்கும் பாசவலும், நெற்பொரியும், வெல்லக்கட்டியும் சிலவகை உணவுகள். தயிரைப் பிசைந்து தாளித்துச் செய்யும் ஒருவகைக் குழம்பை, "தீம்புளிப்பாகர்" என்று குறிக்கின்றனர். பொரியோடு கலந்து

பாலை இளைஞர் உண்டல் வழக்கம் (356) உண்பாரது தகுதிக்கேற்ற உணவுகள் புலவர்களாற் கூறப்படுகின்றன. காக்கைக்கு வெண்ணெற்சோறும் நெய்யும் இடுவதும், அறிவருக்குச் செந்நெற்சோறும் நெய்யும் இடுவதும் இதனை வெளிப்படுத்தும்; பாணனுக்குரிய உணவாக நெய்யிற் பொரித்த குறும்பூழ்ப் பறவையாகிய வியஞ்சனம் சொல்லப்படுதலும் காண்க.

உணவுக்குரிய பொருள்களாகிய நெல், வரகு, தினை, மொச்சை, கள் என்பனவற்றைப் பற்றிய செய்திகள் பல. கள்ளென்பதை மயக்கத்தைத் தரும் தென்னங்கள்ளென்றே கொள்ளுதல் தக்கதன்று. அரசர்களும் வேறு சிறந்த வாழ்க்கை நிலையையுடைய மக்களும் இதனை நுகர்வாரென்பதை ஆராய்கையில் அவர்களுக்கு மனவெழுச்சியைக் கொடுக்கும் பானவகையென்றே கொள்ளுதல் வேண்டும்.

கள்ளில் நெல்லாற் செய்த கள்ளும், பனங்கள்ளும், இனிமையும் வெப்பமுமுடைய கள்ளும், தேனாலாகிய ஒருவகைக் கள்ளும் மக்களுக்கு உணவாகச் சொல்லப்படுகின்றன. அதனைக் கண்ணாடிக் குப்பிகளிற் சேமித்து வைப்பர்; அவற்றின் வாய் குறுகியும் ஏனைப்பகுதி அகன்றும் இருக்கும்;

" மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன
இட்டுவாய்ச் சுனைய "

என்னும் அடிகள் இச்செய்திகளை அறிதற்குக் கருவியாக உள்ளன.

## உரை

மனிதன் பெற்ற பேறுகளில் பேசும் ஆற்றல் ஒன்று. விலங்குகள் உண்ணுதற்குரிய வாய்பெற்றும் பேசுதற்குரிய ஆற்றலின்மையின் வாயில்லாப் பிராணிகளாகின்றன. மனிதன் தனக்கு அரிதிற் கிடைத்துள்ள வாயாற் பேசும் உரைகள் இன்ன தன்மையினவாதல் வேண்டுமென்பதைப் பற்றிய புலவர்களுடைய எண்ணங்களை இந்நூலிலிருந்து ஒருவாறு அறியலாகும். அவற்றை அவர்கள் தனியாக எடுத்துக் கூறவில்லை. ஆயினும், தலைவன் தலைவி முதலியோருடைய இயல்புகளோடு சார்த்திச் சொல்லும் இடங்களிலுள்ளவற்றை நாம் தனியே யெடுத்து ஆராய்ந்து பார்ப்பின் சொல்லைப்பற்றிய அவர்கள் எண்ணங்கள் புலப்படும்.

பொய்ம்மொழி புகலுதல் அறவே ஒழிக்கத் தக்கதென்பது அவர்களுடைய முதற்கொள்கை. ஒருவர்பாலுள்ள விருப்பத்

தால் உள்ளதை மறைத்துக் கூறுதலை அவர்கள் வெறுத்தனர். அறிந்த செய்தியைப் பொய்த்துக் கூறுதல் ஆன்றோர்கள்பால் இல்லை. அங்ஙனம் தீதுமொழிந்தார் தக்காராகார். உண்மையைப் போலத் தோற்றும்படி பொய்யைச் சொல்லுதலும் பிழை;

"வாய்போற் பொய்ம்மொழி கூறலஃ தெவனோ" (259)

என்பது காண்க. நன்மையைத் தருவதாகிய உண்மையைக் கூறுதற்குச் சிறிதும் அஞ்சார்;

"நன்மொழிக் கச்ச மில்லை" (392)

என்பதே அவர்கள் கருத்து. பயனுடைய மொழியை நல்லுரையாகவும் பயனற்றமொழியைப் புல்லுரையாகவும் கருதினர். இனிமையோடு பேசுதலையே அவர்கள் விரும்பினர். இன்னாக் கிளவியை அகற்றினர். பிறரைப் பழித்தலையும் வெறுத்தனர். பொய், பயனில் சொல், இன்னாச் சொல், புறங்கூற லென்ப வற்றை உரையின் குற்றங்களென்று திருவள்ளுவர் வகுத்துக் காட்டிய நெறியையே இந்நூற் செய்யுட்களிலும் காண்கின்றோம்.

பேசும்பொழுது ஆராய்ந்து பேசுதலே சிறந்தது; "தெரி தீங்கிளவி" என்னுந் தொடர் இதனைக் குறிக்கின்றது. நெஞ்சில் நன்மையையே நினைத்துப் பேசவேண்டும்; "தீதி னெஞ்சத்துக் கிளவி" என்பது இக்கருத்தைத் தோற்றுவிக்கின்றது. அழகிய சொற்களால் இனிமை தோன்றப் பேசவேண்டும்; "அந்தீங் கிளவி" யென்னும் தொடரால் இதனைப் பெறலாகும். மெல்லென இனிமைபெறக் கேட்பார் விரும்பும்வண்ணம் பேசும் உரைகளை,

"மெல்லிய வினிய மேவரு தகுந"

என ஒரு புலவர் குறிக்கின்றனர். இவற்றால் வஞ்சகமில்லா நெஞ்சத்தோடு எண்ணி ஆராய்ந்து அழகிய சொற்களால் இனிமையும் நன்மையும் உண்டாகும்வண்ணம் உண்மையும் பயனும் உடைய சொற்களைப் பிறர் விரும்பிக் கேட்கும் முறையிற் பேசும் மொழிகளே சிறந்தவையென்று பழம் புலவர்கள் எண்ணிய எண்ணம் புலப்படுகின்றதன்றோ?

## இசை

தமிழர் இசையைப் போற்றி வளர்த்து வந்தனர். இசைப் பயிற்சியையே தம் வாழ்க்கைத் தொழிலாகக் கொண்ட பாணர் முதலியோர் தமிழ்மக்களுக்குத் தம்முடைய இசையினால் இன்பம் ஊட்டினர். இசையைப்பற்றியும், இசைக்கருவிகளைப் பற்றியும் சில செய்திகள் இந்நூலில் உள்ளன.

தோற்கருவிகளில் தண்ணுமை, தொண்டகம், பதலை, முரசு, முழவென்பன இதில் வந்துள்ளன. இவற்றுள் தொண்டகப்பறை குறிஞ்சி நிலத்தாருக்குரியது (375). துளைக்கருவியுள் குழலின் இசை வங்காவென்னும் பறவையின் ஒலிக்கு உவமையாகின்றது. பண்களுள் படுமலைப்பாலையின் உச்ச விசையும் நெய்தற்குரிய விளரிப்பண்ணும் உவமைகளாக ஆளப்படுகின்றன. பாட்டுக்களுள் குன்றம் பாடும் பாட்டும் உலக்கைப்பாட்டாகிய வள்ளையும் மகளிரால் பாடப்படுவனவாகும்.

## கடவுள்

இவ்வாறு நாகரிகமிக்க வாழ்க்கையை நடத்திய தமிழ் நாட்டினர் கடவுளை வணங்கி வழிபட்ட முறைகள் பலவகைப் படும். முருகக்கடவுளைக் குறிஞ்சிநிலமக்கள் வெறியாட்டெடுத்து வழிபடுவர். இந்நூலுக்குக் கடவுள் வாழ்த்தாக அமைந்த செய்யுள் முருகக் கடவுளைப்பற்றிக் கூறுவது. அவர் தாமரை போன்ற திருவடிகளையும், பவழம்போன்ற மேனியையும், திகழும் ஒளியையும், குன்றிமணிபோன்ற செந்நிற உடையை யும், சுடரெறிக்கும் நெடிய வேலாகிய படையையும், அம்பையும், கழலும் தொடியையும், சேவற்கொடியையும் உடையவர். உலகத்தைத் துன்பத்தினின்றும் காத்து இன்பத்தை உண்டாக்கு பவர். அவருக்கு யானைவாகனம் உண்டு. குன்றின் நெஞ்சுபக வேலெறிந்த வீரமும் அவுணரை அழித்த புகழும் உடையவர். அவரைச் சேய், நெடுவேள், முருகு என வழங்குகின்றனர். குறிஞ்சிநிலத்தார் கடம்ப மரத்தில் அவர் உறைவதாகக் கருதி அதனைப் பூசிப்பர். அரலைமாலை சூட்டியும், தினைக்கதிரையும் தினையையும் வைத்தும், மறிப்பலி கொடுத்தும் முருக வேளை வழிபடுவர்.

மலையிலுள்ள வேறு சில தெய்வங்களைச் சூரென்பர். அவர் களுட் பெண்தெய்வங்களைச் சூரரமகளிரென்பர். அத்தெய்வத் தாற் பற்றப்படுதலும் அங்ஙனம் பற்றப்பட்டார் நடுங்குதலும் இயல்பு.

கடவுள் கொடியோரைத் தண்டிக்குமென்னும் கொள்கை யுடையராகிய மக்கள் அக்கடவுளுக்கு அஞ்சி அறநெறியில் ஒழுகினர்.

சூலத்தையுடைய துர்க்கையை வழிபட்டுக் காப்புநூல் கட்டி விரதமிருத்தல் மகளிர் வழக்கம். பேய்களைப்பற்றிய செய்திகள் சில வருகின்றன.

கூற்றுவனைப்பற்றிய செய்தியொன்று உளது. அவன் இரக்கமின்றி உயிரைக்கொண்டு செல்லுதலின் அவனது செயலை, "அறனில் கோள்" என ஒரு புலவர் சொல்கின்றார்.

மக்கள் தம்முடைய புண்ணியச் செயலால் தேவர்களாகி அவர்களுக்குரிய போகங்களை நுகர்வரென்ற கொள்கை அக்காலத்திலும் இருந்தது. நன்றி செய்தாரை, "இவர்கள் அமிர்தம் உணவாகப்பெற்றுத் தேவலோக வாழ்க்கையைப் பெறுவாராக" என்று வாழ்த்துவார் கூற்றுக்களால் இதனை அறியலாம். தேவலோகம் புத்தேளுடென்றும், உயர்நிலையுலகமென்றும், பெரும்பெயருலகமென்றும் சொல்லப்படும். புண்ணியஞ் செய்தார் சுவர்க்க பதவியுறுதல் குறிக்கப்படுதல் போலவே பாவஞ் செய்தார் நிரயம் புகுதலும் குறிக்கப்படுகின்றது. வாழ்த்துவார்கூற்றினுல் முன்னது வெளிப்படுதலைப் போல வைவார்கூற்றினுற் பின்னது தெளிவாகின்றது (292)

## நீதிகள்

அறம் பொருள் இன்பம் வீடுபற்றிய நீதிகள் அங்கங்கே அமைந்து விளங்குகின்றன. பெரிய உபகாரம் செய்தால் அவரை யாவரும் விரும்புவரென்பது,

"பெருநன் றாற்றிற் பேணுரு முளரோ" (115) என்பதனுலும்

அறத்தாற் புகழ்பெற விரும்புவார் பொருளைச் சேமித்து வையாமல் ஈவாரென்னும் கருத்து,

"நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற்
கடப்பாட் டாள னுடைப்பொருள் போலத்
தங்குதற் குரிய தன்று" (143) என்பதனுலும்

சான்றோர் அறநெறியே செல்வரென்பது,

"திறவோர் செய்வினை யறவ தாகும்" (247) என்பதனுலும்

சான்றோர் தம்மைப் புகழ்ந்தால் நாணமடைவாரென்பதும் பழியைப் பொருரென்பதும்,

"சான்றோர், புகழு முன்னர் நாணுப
பழியாங் கொல்பவோ" (252) என்பதாலும்

வறியவருக்கு ஈந்து அன்புடையராயிருத்தலே நன்றென்பதும் அங்ஙனம் இராமை நன்றன்றென்பதும்,

"நல்கின் வாழு நல்கூர்ந் தோர்வயின்
நயனில ராகுத னன்றென வுணர்ந்த
குன்ற நாடன் றன்னினு நன்று" (327) என்பதாலும்

ஒருவருக்கு வழங்கிய பொருளை மீட்டும் பெறுதல் இழிவென்ற நீதி,

> " இடுக்க ணஞ்சி யிரந்தோர் வேண்டிய
> கொடுத்தவை தாவென் சொல்லினும்
> இன்னா தோநம் மின்னுயி ரிழப்பே " (341) என்பதனாலும்

கடமையை யுணர்ந்தவர்கள் சான்றோரைக் கண்டால் இடங் கொடுத்து வரவேற்பரென்னும் செய்தி,

> " தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட
> கடனறி மாக்கள் போல விடன்விட்டு " (265) என்பதாலும்

வெளியாகின்றன. இவை அறம் பற்றிய நீதிகள்.

> " இல்லோ னின்பங் காமுற் றுங்கு " (120)
> " இல்லோர் வாழ்க்கை யிரவினு மிளிவு " (283)

என்பன வறுமையின் இழிவைப் புலப்படுத்துவன.

> " உள்ள து சிதைப்போ ருளரெனப் படாஅர் " (283)
> " வினையே யாடவர்க் குயிரே " (135)

என்பவை முயற்சியின் இன்றியமையாமையை அறிவுறுத்து கின்றன.

> " ......இனத்தி னியன்ற
> இன்னா மையினு மினிதோ
> இனிதெனப் படூஉம் புத்தே ளுடே " (288)
> " மருவி னினியவு முளவோ " (322)

என்பவை நட்பின் பெருமையை எடுத்துரைக்கின்றன.

> " நில்லா மையே நிலையிற்று " (143)

என்பது நிலையாமையைக் கூறுகின்றது.

# இலக்கணச் செய்திகள்

## நால்வகைச் சொற்கள்

சில முறைப் பெயர்கள் இடத்திற்கேற்ற மரபையுடையன. யாயென்பது தன்மையிடத்துக்கும் ஞாயென்பது முன்னிலைக் கும் தொடர்புடைய முறைப்பெயர்களென்று தெரியவருகின்றது (40)

வினையெச்ச உருவங்களில் செய்யிய, செய்யியரென்னும் வாய்பாடுடைய சொற்கள்பல அளபெடையோடு காணப்படு கின்றன. செய்பு, செய்ம்மாரென்னும் வாய்பாட்டெச்சங்களும்

வந்துள்ளன. குடியென்னும் வினையடியாகப் பிறந்த செய்யிய வென்னும் வாய்பாட்டெச்சம் குடஇயவென விருத்தல் முறை; இந்நூலில் குடிக்கியவென (356) வந்துள்ளது. அதற்குக் குடித்தியவென ஒரு பாடம் காணப்படுகின்றது.

இசின், சின் என்னும் இரண்டு இடைச்சொற்கள் பல விடங்களில் ஆளப்படுகின்றன. அவற்றுள், இசினென்பது "வழிபடல் சூழ்ந்திசின்" (11) என்பதுபோலத் தன்மையிலும், சின்னென்பது "உரைத்திசின்" (13) என்பதுபோல முன்னிலையிலும் பல விடங்களில் அமைந்துள்ளன. அழேன்றேவென்னும் பொருளில் "அழாற்கோ" (192) என ஓர் அரும்பதம் இந்நூலில் மட்டும் காணப்படுகின்றது.

மோ, மே, தில்ல, மன், மன்ற, அம்ம, தலை, ஆல், ஏ, ஓ முதலிய பலவகை இடைச்சொற்கள் பொருளுடையனவாகவும் அசைநிலையாகவும் வழங்குகின்றன. அங்ஙனமே நனி, தவ முதலிய உரிச்சொற்களையும் இதிற் காணலாம்.

## வடசொற்கள்

வடசொற்கிளவிகள் வடவெழுத் தொருவித் தமிழெழுத்தைப் பெற்றும் தமிழுக்கு ஏற்ற விகாரங்களை யடைந்தும் வேறு பல வகையில் திரிந்தும் வழங்குகின்றன. அவை வருமாறு:—அகில், அச்சிரம், அமயம், அமிழ்தம், அரசன், அவை, ஆரியர், இமயம், உலகம், ஏமம், கடிகை, கமண்டலம், கலாவம், காமம், காலம், குணன், குவளை, சகடம், சூலி, சேமம், தண்டு, தாது, தூது, தெய்வம், நகர், நீலம், நேமி, பக்கம், பணிலம், பருவம், பலி, பவழம், பிச்சை, மண்டிலம், மணி, மதம், மதி, மாலை, முகம், முத்து, முரசு, யாமம், வாசம் முதலியன. இவற்றிற் சிலவற்றைத் தமிழெனவே கொள்வாரும் உளர்.

## உவமை

வினை பயன் மெய் உருவென்னும் நால்வகை யுவமைகளும் பலவிடங்களில் உள்ளன. உவமையின் நயம் சங்க நூல்களிற் போலப் பிற்கால நூல்களிற் காணல் இயலாது.

உவமையும் பொருளும் ஒரே இடத்திலுள்ளனவாகச் சில உவமங்கள் கூறப்படுகின்றன; பாலை நிலத்திலுள்ள பல்லியின் ஒலிக்கு அந்நிலத்திலுள்ள மறவர் அம்பை உகிர்நுதியிற் புரட்டும் ஓசையை உவமை கூறுதலும் (16), அகவன் மகளுடைய நரைமயிருக்கு அவளணிந்த மனவுக் கோப்பையே உவமை

யாக்குதலும் (23), மலைமேலுள்ள இற்றியின் வேருக்கு அங்குள்ள அருவியை உவமையாக அமைத்தலும் (106), ஒரு குறமகளின் கண்ணுக்கு அவளுடைய தமர் எய்த அம்பை உவமித்தலும் (272) இவ்வகையைச் சார்ந்தவை.

கூற்றுடையார் தாம் அறிந்த உவமையைக் கூறுதல் இயல்பு; மலையில் வாழும் தோழி தலைவியின் காமத்துக்குப் பலாப்பழத்தையும் (18), குறிஞ்சி நிலத்தலைவி தான் ஆற்றி யிருத்தலுக்குக் கிளியுண்ட கூழைத்தினை தழைத்தலையும் (133) உவமையாக இயம்புதல் இத்தகையதே யாகும்.

கேட்பார் தெளிவதற்கேற்ற உவமையைக் கூறுதல் ஒரு வகை. பரத்தையிற் பிரிந்துவந்த மருதநிலத்தலைவனுக்குத் தம் நிலையைப் புலப்படுத்த வந்த தோழி,

"கைவினை மாக்கடஞ் செய்வினை முடிமார்
சுரும்புண மலர்ந்த வாசங் கீழ்ப்பட
நீடின வரம்பின் வாடிய விடினும்
கொடியரோ நிலம்பெயர்ந் துறைவே மென்னாது
பெயர்த்துங் கடிந்த செறுவிற் பூக்கும்
நின்னூர் நெய்த லனையேம் பெரும" (309)

என்று கூறுதல் இதற்கேற்ற உதாரணமாதல் காண்க. அன்ன, அனைய, ஆங்கு, இன், இன்ன, ஏய்க்கும், ஒத்து, கடுப்ப, புரையும், போல், மருள், மானும் முதலிய உவம உருபுகள் செய்யுட்களில் வந்துள்ளன.

## புலவர்கள்

இந்நூற் செய்யுட்கள் சிலவற்றில் ஆசிரியர் பெயரே ஏடுகளில் இல்லை. சில ஆசிரியர்கள் பெயர்களிற் பல பிரதி பேதங்கள் உள்ளன. சில பெயர்கள் ஒரே புலவர்க்குரியன வாகக் கருத இடமிருப்பினும் துணிந்து சொல்ல முடியவில்லை.

ஆயினும் இப்பொழுது கிடைக்கும் பெயர்களைக்கொண்டு புலவர்களைப்பற்றிய சில விஷயங்களை நாம் அறிந்துகொள்ள இயலும். சில புலவர்களுடைய ஊர், சாதி, தொழில், உறுப்புக் குறை முதலிய சிலவற்றை அவர்களுடைய பெயர்களிலிருந்தே ஊகித்து உணர்ந்துகொள்ளலாம். அன்றியும் அக்காலத்தில் மக்களுக்கு இடும் பெயர்களைப்பற்றிய சில செய்திகளையும் தெரிதல் கூடும்.

இந்நூற் செய்யுட்களில் பொருள்களைச் சிறப்பித்தும் அரிய உவமைகளைக் கூறியும் தம் புலமைத் திறத்தைக் காட்டிய

புலவர்கள் சிலருக்கு அவ்வாற்றலைக் குறிக்கும் சிறப்புப் பெயர்கள் அமைந்துள்ளன. அவற்றிற் சில சிலருடைய இயற்பெயரோடு இணைந்தும் வேறு சில தனியாகவும் உள்ளன.

## சிறப்புப் பெயர்கள்

(1) கார்க்கியரென்னும் புலவர் பெருமான் நெய்தற்றிணையைப் பாடும் ஆற்றல் வாய்ந்தமையின் நெய்தற் கார்க்கியரென்று வழங்கப்படுகின்றார். அவர் பாட்டுக்களில் (55, 212) நெய்தல் நிலத்தில் கழியிலுள்ள நிலப்பூக்கள் கூம்புவதும், கடற்றிவலை வீச ஊதைக்காற்றுத் துன்பத்தை யுண்டாக்குவதும், தலைவன் மணியொலிக்கத் தேரிலேறிக் கடற்கரை வழியே வருவதும் சொல்லப்படுகின்றன.

(2) பெருங் கடுங்கோவென்பவர் ஓரரசர்; தமிழ்ப் புலமையிற் சிறந்தவர். அவர் பாலை நிகழ்ச்சிகளைப் பாடுதலில் வீறு பெற்றவராதலின் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்ற பெயரால் வழங்கப்படுகின்றார். இந்நூலிலுள்ள அவர் பாடல்களிற் பெரும்பாலன பாலைக்குரியனவே.

(3) கோவேங்கைப் பெருங்கதழ்வனென்பது ஒருவர் பெயர். அவர் செய்யுளில் (14) கல்லினிடையே முளைத்த வேங்கை மரத்தின் பூவையுடைய கிளையை அருவி தாக்கும் காட்சி வருணிக்கப்படுகின்றது. வேங்கை மரத்தைப் பற்றிய இச் செய்தியை அமைத்ததுபற்றி இவர் இயற்பெயரோடு வேங்கை யென்னும் அடை இயைக்கப் பெற்றதென்று கருத இடமுண்டு.

(4) மாதங் கீரனென்னும் புலவர் மடலேற்றத்தைப் பற்றிய செய்திகளைத் தம் செய்யுளிற் சொல்லுதலின் (182) மடல்பாடிய மாதங்கீரனென்னும் பெயரோடு குறிக்கப்படுகின்றார்.

(5) நச்செள்ளையாரென்ற புலவர் காக்கையைப் பற்றிப் பாராட்டிப் பாடினமையின் காக்கைபாடினியார் நச்செள்ளையாரென்று சிறப்பிக்கப்பெற்றார்.

இந்த ஐந்து புலவர்களுடைய இயற்பெயரும் சிறப்புப் பெயரும் ஒருங்கே அறியப்படுகின்றன.

சிறப்புப்பெயர் மாத்திரம் தெரியும் புலவர்கள் :—

(1) **கயமனார் :** பசிய இலையினின்றும் மேலெழுந்த நெய்தற்பூ கழியில் வெள்ளம் மிகும்போதெல்லாம் கயத்தின்கண்ணே மூழ்கும் மகளிருடைய கண்ணை யொக்குமென்று இவர் ஒரு செய்யுளிலே (9) பாடுகின்றார். இதுபற்றி இவர் கயமனாரென்ற சிறப்புப் பெயர் பெற்றாரென்று ஊகிக்கப்படுகின்றது.

(2) **செம்புலப் பெயனீரார்:** நொதுமலராக இருந்த தலைவனும் தலைவியும் ஒன்றுபட்டு உள்ளப்புணர்ச்சி யுற்றதை,

> " செம்புலப் பெயனீர் போல
> அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே " (40)

என உவமை வாயிலாக வெளியிட்ட சிறப்புப்பற்றி இவர் இப் பெயர் பெற்றார்.

(3) **அணிலாடு முன்றிலார்:** தலைவன் பிரிந்த காலத்தில் பொலிவிழந்த தலைவிக்கு மக்கள் போகிய அணிலாடு முன்றிலை யுடைய இல்லத்தை உவமையாக்குதலின் (41) இவர் பெயர் இங் ஙனம் அமைந்தது.

(4) **நெடுவெண்ணிலவினார்:** களவுக் காலத்தில் இரவுக் குறிக்கண் வரும் தலைவனுக்கு இடையூறாக இருக்கும் நிலவை, 'நெடுவெண்ணிலவே' என விளித்துத் தோழி வெறுப்புக் குறிப் புப்படக் கூறுவதாக ஒரு செய்யுள் (47) பாடியதால் இவர் இப் பெயரைப் பெற்றார்.

(5) **மீனெறி தூண்டிலார்:** கானயானை கைவிடு பசுங் கழை மீனெறி தூண்டிலைப்போல மேலே எழும்புமென உவமை கூறிய திறம்பற்றி (54) இவர் இப்பெயரை அடைந்தார்.

(6) **விட்ட குதிரையார்:** யானையாற் பற்றிவிடப்பட்ட மூங்கில் செருவிற் செலுத்திவிட்ட குதிரையைப்போல மேலே எழும்புமென உவமையை அமைத்தமையின் (74) இச்சிறப்புப் பெயரால் இவர் வழங்கப்பட்டார்.

(7) **ஓரேருழவனார்:** தலைவியைக் காணுவதற்கு விரையும் தன் நெஞ்சிற்கு ஒரு தலைவன் 'ஈரம்பட்ட செவ்விப்பைம் புனத்து ஓரேருழவனை' உவமிப்பதாகச் செய்யுள் செய்தமை யின் (131) இவர் இப்பெயர்க்கு உரியரானார்.

(8) **கூவன் மைந்தன்:** துன்பத்தை வெளிப்படக் கூற மாட்டாது துயருறும் தலைவிக்கு இரவிலே கூவலில் குராற்பசு வீழக்கண்ட ஊமனை உவமித்தலின் (224) இப்பெயர் இவருக்கு உரியதாயிற்று. மைந்தனென்பது இவரது இயற்பெயர் போலும்.

(9) **காலெறி கடிகையார்:** தலைவியின் எயிற்றுநீரின் இனிமைக்கு அடிக்கரும்பில் வெட்டிய துண்டத்தைத் தின்றதால் உண்டாகும் இனிமையை உவமித்து,

> " ... ... ... கரும்பின்
> காலெறி கடிகைக் கண்ணயின் றன்ன
> வாலெயி றூறிய வசையி றீநீர் " (267)

எனச் சிறப்பித்தலின் இவர் இங்ஙனம் குறிக்கப்பெற்றார்.

(10) **ஓரிற்பிச்சையார்:** அறிவர் பெறும் உணவை ஓரிற் பிச்சையெனக் குறித்தலின் (277) இப்புலவர் இப்பெயருடைய ராஞர்.

(11) **கல்பொரு சிறுநுரையார்:** தலைவனைப் பிரிந்திருக்க மாட்டாத தலைவி அப்பிரிவிஞல் உண்டாகும் துன்ப மிகுதியைப் புலப்படுத்தி,

> " யாமெங் காதலர்க் காணே மாயிற்
> செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
> கல்பொரு சிறுநுரை போல
> மெல்ல மெல்ல வில்லா குதுமே " (290)

எனக் கூறுவதாகப் பாடினமையின் இவர் இக்குறியீடு பெற்ருர்.

(12) **கள்ளிலாத்திரையனுர்:** கட்குடிக்கும் விருப்பத்திஞற் சில நண்பர்கள் கூடிக்கொண்டு சென்றதைக் கள்ளிற்கேளிராத் திரையெனக் குறித்தலின் (293) இவர் இச் சிறப்புப் பெயரால் வழங்கப் பெற்ருர்.

(13) **குப்பைக் கோழியார்:** தலைமகள் தன் நோயைத் தீர்ப்பார் ஒருவருமின்றித் தான் வருந்துவதைக் குப்பைக் கோழித் தனிப்போருக்கு உவமிப்பதாக ஒரு செய்யுள் (305) செய்தலின் இந் நல்லிசைப் புலவர் இப்பெயரைப் பூண்டார்.

(14) **பதடிவைகலார்:** தலைவியோடு பழகாத நாளைப் பதடி வைகலென்று (323) சொல்லுதலின் இவர் இக்குறி பெற்ருர்.

(15) **கவைமகன்:** இரட்டைப் பிள்ளைகளைக் கவைமக வெனக்கூறி அவர்கள் நஞ்சுண்டதை உவமையாக எடுத்தாண்ட மையின் (324) இச்சான்ருேர் இவ்வாறு குறிக்கப் பெற்ருர்.

(16) **வில்லக விரலினுர்:** பரத்தையும் தலைவனும் ஒன்று பட்டதற்கு வில்லைப் பிடித்த விரல்களை உவமித்து,

> " வில்லக விரலிற் பொருந்தி " (370)

எனப் பாடுதலின் இவர் இக்காரணப் பெயர் பெற்ருர்.

(17) **கங்குல் வெள்ளத்தார்:** இரவினைக் கண்டு தலைவி அஞ்சி,

> " கங்குல் வெள்ளங் கடலினும் பெரிதே " (387)

எனக் கூறுவதாக அமைத்தலின் இவர் இவ்விசேடப் பெயரை யடைந்தார்.

(18) **குறியிறையார்:** குறமகாரைக் குறமகளீன்ற குறி யிறைப் புதல்வரெனக் (394) குறித்தலின் இவர் இப்பெயர் பெற்ருர்.

இப்புலவர்களுள் பதின்மூவர் தாம் கூறிய உவமை நயத்தாற் பெயர் பெற்றவர்களாதல் காண்க. இதனாற் புலமை யாற்றல் உவமையால் வெளிப்படுமென்னும் பண்டையோர் கொள்கை தெளிவுறும்.

## புலவர்களுடைய ஊர்கள்

பல புலவர்களின் பெயர்களோடு அவர்களுடைய ஊர்களும் சேர்த்துச் சொல்லப்படுகின்றன. அவ்வூர்கள் தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் விரவியுள்ளனவாகத் தோற்றுகின்றன. அவையாவன : (1) அரிசில், (2) அள்ளூர், (3) ஆலங்குடி, (4) ஆலத்தூர், (5) இடைக்காடு, (6) இருந்தையூர், (7) ஈழம், (8) உகாய்க்குடி, (9) உரோடகம், (10) உறையூர், (11) ஐயூர், (12) ஒக்கூர், (13) கச்சிப்பேடு, (14) கடம்பனூர், (15) கடியலூர், (16) கருவூர், (17) கழார், (18) காவிரிப்பூம்பட்டினம், (19) கிடங்கில், (20) கிள்ளிமங்கலம், (21) குடவாயில், (22) குறுங்குடி, (23) கூடலூர், (24) கோழி, (25) கோவூர், (26) சிறைக்குடி, (27) செல்லூர், (28) தங்கால், (29) பெருங்குன்றூர், (30) பொதுக்கயம், (31) மதுரை, (32) மாங்குடி, (33) மாடலூர், (34) மிளை, (35) வெள்ளூர், (36) வேம்பற்றூர். இவ்வூர்களுள் உறையூர், கருவூர், காவிரிப்பூம்பட்டினம், மதுரையென்னும் பெரிய நகரங்களிற் பல புலவர்கள் வாழ்ந்து வந்தனர்.

## சாதி

புலவர்களுடைய சாதியை வெளிப்படுத்தும் பெயர்கள் பல. கபிலர் முதலிய சிலர் அந்தணரென்பது வேறு வகையால் தெரிய வருகின்றது. ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தன் அரசர்களுள் ஒரு வகையினனென்பதை அவன் பெயர் தெரிவிக்கின்றது. குட்டுவன் கண்ணன், நம்பி குட்டுவனென்பவர்களும், சேரமான் சாத்தன், சேரமானெந்தை யென்பவர்களும் சேரர் பரம்பரை யினராகத் தோற்றுகின்றனர். சோழர்களுள் கோப்பெருஞ் சோழனது செய்யுள் ஒன்று இந்நூலில் உள்ளது. அண்டர் மகன் குறுவழுதி, பாண்டியன் பன்னாடு தந்தானென்பார் தம் பெயராலேயே பாண்டியமன்னர் பரம்பரையினரென்பதைப் புலப்படுத்துகின்றனர். கோக்குளமுற்றன், கோவேங்கைப் பெருங்கதழ்வனென்னும் பெயர்களிலுள்ள கோவென்னும் அடை அவர்கள் முடியுடை மன்னர் குலத்தினரென்பதை யறிவிக்கின்

றது. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனுரென்பவர் வாணிகரென்றும், அவர் ஆடை வியாபாரம் செய்தனரென்றும் அவர் பெயர் அறிவிக்கின்றது. வேளாளர்களுள் வேளென்னும் பெயரால் அறியப்படுவாரும், கிழாரென்னும் பெயரால் அறியப் படுவாரும் பலர். மூதெயினனுர் என்னும் புலவர் மறவராகக் கருதப்படுகின்றார்.

## தொழில்

புலவர்கள் தொழிலைச் சில பெயர்கள் உணர்த்துகின்றன. பாண்டியன் ஏனுதி நெடுங்கண்ணனென்பார் பாண்டியனுக்குப் படைத் தலைவராக இருந்தார். செய்தி வள்ளுவன் பெருஞ் சாத்தனென்பவர் அரசாங்கத்துச் செய்திகளை யறிவிக்கும் கருமத்தலைவராக இருந்தனர். குலபதி நக்கண்ணனுரும், கணக்காயன் தத்தனுரும், ஆசிரியன் பெருங்கண்ணனுரும் ஆசிரியத் தொழிலுடையார். மதுரை யெழுத்தாளன் சேந்தன் பூதனுர் எழுதும் தொழிலினர். கொல்லன் அழிசி, தங்கால் முடக் கொல்லனுர், மதுரைக் கொல்லன் புல்லன் (புலவன்?), மதுரைப் பெருங்கொல்லனென்பார் கொற்றெழிலையும், உலோச்சனுரென் பவர் உலோச்சென்னும் தொழிலையும், உறையூர் முதுகூத்தனுர், வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தனென்னும் இருவரும் கூத் தாடுந் தொழிலையுமுடையாரென்பதை அவர்கள் பெயர்களே புலப்படுத்துகின்றன.

இவற்றால், அரசர்களும் அரசியலில் துணைபுரியும் படைத் தலைவர் முதலியோரும் பல்வேறு சாதியினரும் பல தொழி லினரும் தமிழை ஆராய்ந்து புலமையுற்று விளங்கியதை அறியலாம். தமிழ்ப் புலமையில் அவர்களுக்குள் வேற்றுமை பாராட்டப்பெறவில்லை. அவர்கள் மனங்கலந்து பழகியிருத்தலும் கூடும். சங்கத்தில் அவர்கள் தம்முடைய புறவேற்றுமைகளை மறந்து தமிழாற் பிணிக்கப்பட்டு ஒன்றி அக்காலத்தில் இருந்தன ரென்று கருத இடமுண்டு. அவர்கள் செய்யுட்கள் இந்நூலிற் கோக்கப்பெற்று ஒன்றுபட்டு விளங்குவதை இப்பொழுது காண் கின்றோம்.

## பெண்புலவர்

இப்புலவர்களுள் அள்ளூர் நன்முல்லையார், ஆதிமந்தியார், ஊண்பித்தை, ஒக்கூர் மாசாத்தியார், ஔவையார், கச்சிப் பேட்டு நன்னுகையார், காக்கை பாடினியார் நச்செள்ளையார், நன்னுகையார், பூங்கணுத்திரையார், வருமுலையாரித்தி, வெள்ளி

வீதியாரென்பார் பெண்பாற்புலவர்களாகக் கருதப்படுகின்றனர். இவர்களுள் அள்ளூர் நன்முல்லையார், ஔவையார், காக்கைபாடினியார் நச்செள்ளையார், வெள்ளி வீதியாரென்பவர்கள் மிக்க புகழ்வாய்ந்தவர்கள். ஆதிமந்தியா ரென்பவர் கரிகாற்பெருவளத்தானுடைய மகளாரென்று தெரிகின்றது.

## உறுப்பால் வந்த பெயர்

ஆசிரியன் பெருங்கண்ணன், காரிக்கண்ணனார், கொல்லிக் கண்ணன், நெடுங்கண்ணன், பூங்கண்ணன், பூங்கணுத்திரையாரென்பார் தம் கண்ணின் இயல்பாற் பெயர்பெற்றவர் போலும். நரிவெரூஉத்தலையார், சீத்தலைச் சாத்தனாரென்பவர்களுக்குத் தலையால் வந்தபெயர்கள் அமைந்தன. கடுந்தோட் கரவீரன், திப்புத் தோளார், பெருந்தோட் குறுஞ் சாத்தன் என்பார் தோளாற் பெயர் பெற்றார். பரூஉமோவாய்ப்பதுமனாரென்பதும் உறுப்பால் வந்தபெயர். ஐயூர் முடவனார், தங்கால் முடக் கொல்லனாரென்னும் இருவரும் முடவரென்பது அப்பெயர்களால் உணரப்படும்.

## அடை மொழிகள்

சில பெயர்களுக்குமுன் மா, பெரு, முது, குறு, இள, ந, நல் என்னும் அடைகள் அமைந்துள்ளன. தொல்கபிலரென்பதில் தொன்மையென்னும் அடைவந்தது. இவை ஒவ்வொரு காரணம் பற்றியே அமைந்தனபோலும். அங்ஙனம் வந்தவை வருமாறு:

(1) இளமை: இளங்கீரந்தையார், இளங்கீரனார், இளம் பூதனார், இளங்கண்ணன், இளம்போத்தன், மருதன் இளநாகனார், இளவேட்டனார், வாயிலிளங்கண்ணன்;

(2) குறுமை: அண்டர் மகன் குறுவழுதி, குறுங்கீரன்;

(3) சிறுமை: சிறு கந்தன்;

(4) ந: அழிசி நச்சாத்தனார், நச்செள்ளையார், நக்கீரனார்;

(5) நன்மை: அள்ளூர் நன் முல்லையார், நன்னாகையார், நல்வெள்ளியார், நல்வேட்டனார்;

(6) பெருமை: பெருங்கண்ணன், கடுகு பெருந்தேவன், பெருஞ்சாத்தன், பாரதம் பாடிய பெருந்தேவனார், பெரும் பதுமனார், பெருங்கொல்லன், பெருங்கந்தன்;

(7) மா: மாசாத்தியார், மாமலாடன், மாமூலனார், மா வளத்தன்;

(8) முதுமை: முதுகூத்தனார், முதுகொற்றனார், மூதெயினனார்.

## சில வழக்காறுகள்

தமிழ் இலக்கண உரைகளில் உதாரணங்களாகப் பல விடங்களில் கொற்றன், சாத்தன், தேவன், பூதனென்னும் நான்கு பெயர்கள் காட்டப்பெறுகின்றன. இவை அக்காலத்தில் மக்களுக்கு மிகுதியாக இட்டு வழங்கும் பெயர்களென்று தோற்றுகின்றன. புலவர் பெயர்களிலும் இந்நால்வகைப் பெயர்களைக் காணலாம்.

(1) **கொற்றன் :** இருந்தையூர்க் **கொற்றன்** புலவன், உறையூர் முது **கொற்றன்**, கச்சிப்பேட்டுக் காஞ்சிக் **கொற்றன்**, கோழிக் **கொற்றனார்**, **கொற்றனார்**, செல்லூர்க் **கொற்றன்**, படுமரத்து மோசி **கொற்றன்**, மதுரை யாசிரியன் கோடங் **கொற்றன்**, வெண் **கொற்றன்** ;

(2) **சாத்தன் :** அழிசிநச்**சாத்தனார்**, உறையூர் முது கண்ணன் **சாத்தனார்**, கருவூர்ச் சேரமான் **சாத்தன்**, செய்தி வள்ளுவன் பெருஞ்**சாத்தன்**, பேரி**சாத்தனார்**, மதுரைச் சீத்தலைச் **சாத்தனார்**, வடமவண்ணக்கன் பேரி**சாத்தனார்** ;

(3) **தேவன் :** கடுகு பெருந்**தேவன்**, பாரதம் பாடிய பெருந்**தேவனார்**, பூதத்**தேவன்**, மதுரையீழத்துப் பூதன்**றேவன்**, வாயிலான் **தேவன்** ;

(4) **பூதன் :** இளம்**பூதனார்**, ஈழத்துப் **பூதன்** தேவன், காவன் முல்லைப் **பூதனார்**, சேந்தம் **பூதனார்**, **பூதத்** தேவன், **பூதம்** புல்லன், மதுரை யெழுத்தாளன் சேந்தன் **பூதன்**, வெண் **பூதன்**.

இவற்றையன்றி ஆந்தை, கீரன், தத்தன், புலவனென்னும் பெயர்கள் பல புலவர் பெயர்களோடு இணைந்து வழங்குகின்றன:-

(1) **ஆந்தை :** அஞ்சி**யாந்தை**, ஓதல**ாந்தை**யார், சிறைக்குடி**யாந்தை**யார் ;

(2) **கீரன் :** இளங்**கீரனார்**, கழார்க்**கீரன்** எயிற்றியன், குடவாயிற் **கீரன**க்கன், குறுங்**கீரன்**, சேந்தன் **கீரன்**, தும்பிசேர் **கீரனார்**, நக்**கீரனார்**, படுமரத்து மோசி **கீரனார்**, மடல் பாடிய மாதங்**கீரனார்** ;

(3) **தத்தன் :** ஆரியவரசன் யாழ்ப்பிரம **தத்தன்**, கணக்காயன் **தத்தன்**, குழற்**றத்தன்**, மதுரைக் 'கண்டர**தத்தன்**, மதுரை வேளா**தத்தன்** ;

(4) **புலவன் :** இருந்தையூர்க் கொற்றன் **புலவன்**, உழுந்தினைம் **புலவன்**, மதுரைக் காஞ்சிப் **புலவன்**. புல்லனென்று வருவனவும் புலவனென்று கொள்ளற்குரியன போலும்.

## தெய்வப் பெயர்கள்

புலவர்க்குரிய பெயர்களில் இறையனூர், உருத்திரன், கண்ணன், கந்தன், குமரன், சத்திநாதன், சாத்தன், தாமோதரன், தேவன், பதுமன், பெருந்தேவனூர், பேரெயின் முறுவலார், வெண்பூதி யென்பன தெய்வப் பெயர்களாகத் தோற்றுகின்றன. கந்தனென்பது கந்துடை நிலையில் வழிபடப்பெறும் கடவுளின் பெயர். சாத்தனென்பது ஐயனூர் பெயர். பதுமனென்பது பிரமதேவன் பெயர். கண்ணன், தாமோதரனென்பன திருமால் பெயர்கள். குமரனென்பது முருகவேள் பெயர். இறையனூர், உருத்திரன், சத்திநாதன், பெருந்தேவனூர், பேரெயின் முறுவலார், வெண்பூதி யென்பன சிவபிரானைக் குறிக்கும் பெயர்கள். பெருந்தேவனென்பது மகாதேவனென்னும் திருநாமத்தின் பொருளுடையது. பேரெயின் முறுவலாரென்பது திரிபுரங்களை முறுவலால் எரித்ததைக் குறிக்கும் பெயரென்றும், வெண்பூதியாரென்பது திருநீற்றை யணிந்ததைக் குறிப்பதென்றும் தோற்றுகின்றன.

## பிறபெயர்கள்

தெய்வப் பெயரையன்றிப் பூதத்தின் பெயரையும் பேயென்னும் பெயரையும் உடைய புலவர்களை இந்நூலால் அறிகின்றோம். முதலாழ்வார்களில் இருவர் பூதத்தாழ்வார் பேயாழ்வா ரென்னும் பெயரை யுடையராக விளங்குதல் இங்கே கருதற்குரியது.

பாரதத்திற் காணப்படும் சல்லியனது பெயரை ஒரு புலவர் பூண்டுள்ளார். சாண்டிலியன், கார்க்கியரென்னும் முனிவர் பெயர்களைச் சிலர் கொண்டுள்ளனர்.

வேறு வகையான பெயர்கள் பல உள்ளன. பல பெயர்கள் இக்காலத்தாருக்கு விநோதத்தை உண்டாக்குவன. அவற்றிற்குரிய காரணத்தை இப்பொழுது அறிய இயலவில்லை.

உறுப்புக்குறை, சாதி, தொழில் முதலியவற்றோடு சார்த்திப் புலவர்களிற் சிலர் பெயர்கள் வழங்குவதை உற்று நோக்கும்போது அவற்றாலும் பிறவகையினாலும் அவர்களுடைய கல்விப் பெருமை குறையவில்லை யென்பதும் அவர்களைக் குறிக்கும் அடையாளமாகவே அத்தகைய முறை கொள்ளப்பட்டதென்பதும் புலனாகின்றன; எல்லாவற்றிலும் புலமையே தலைமை பெற்று விளங்கியதென்ற கருத்து உறுதியாகின்றது.

# பாடினோர் வரலாறு

(கு - பு.) பாடினோர் பெயருக்கு அடுத்தாற்போல் ( ) இந்த நகவளைவுக்குள் இருக்கும் எண் அவர் இயற்றிய குறுந்தொகைச் செய்யுளைக் குறிக்கும்.

**அஞ்சிலாந்தையார்** (294) :—அஞ்சில் என்பது ஓர் ஊர். ஆதன் தந்தையாரென்னும் தொடர்மொழி ஆந்தையாரென்று மருவிற்று. அஞ்சில் என்னும் ஊரினராதலின் இவர் அஞ்சிலாந்தையாரென்னும் பெயர் பெற்றார். இவர் குறிஞ்சி, நெய்தல் வளங்களைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். தலைவன் களவில் தலைவியோடு கடலாடுதலும், தலைவி ஆயத்தோடிருக்கையில் அவளுடன் குரவையாடுதலும் அதன் காரணமாக அலரெழுதலும் இவர் வாக்கிற் காணப்படும் செய்திகள். இவர் மகளார் நாகையா ரென்பாரும் இவரை யொப்ப நல்ல புலமை வாய்ந்தவர். இவர் பெயர் சில பிரதிகளில் அஞ்சியாந்தையா ரென்றும் காணப்படுகிறது. இவர் பாடிய வேறு செய்யுள் நற்றிணை, 233. வேறு அடைமொழிகள் கொண்ட ஆந்தையார் பலர் உளர்.

**அண்டர் மகன் குறுவழுதியார்** (345) :—தொகை நூல்களுள் குறுவழுதியார் என்று ஒரு பெயர் வருகிறது. இவ்விரு பெயரினரும் ஒருவரோ வேறோ தெரியவில்லை. வழுதியென்ற பெயரால் இவர் பாண்டிய மரபினரென்பது போதரும். மேலே குறித்த குறுந்தொகைச் செய்யுளையன்றி, இவர் புறநானூற்றில் 346 - ஆம் செய்யுள் இயற்றியதாகவும், குறுவழுதியார் என்பவர் அகநானூற்றில், 150, 228-ஆம் செய்யுட்கள் இயற்றியனவாகவும் உள்ளன. இவர் வாக்கில் வந்துள்ள " கல்வி யென்னும் வல்லாண் சிறாஅன் " (புறநா. 346) என்பது பாராட்டற்பாலது.

**அணிலாடு முன்றிலார்** (41) :—இவரது இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. மக்களின் நடமாட்டமில்லாத முற்றத்தில் அணில் ஓடிக்கொண்டிருக்கும். தலைவன் பிரிந்தபோது பொலிவிழந்த தலைவிக்கு மக்கள் போகிய அணிலாடு முன்றிலையுடைய இல்லத்தை உவமை கூறினமையின் இவர் பெயர் இங்ஙனம் அமைந்தது. எட்டுத் தொகையுள் இக் குறுந்தொகைச் செய்யுளையன்றி வேறொன்றையும் இவர் இயற்றியதாகத் தெரியவில்லை.

**அம் மூவன், அம் மூவனார்** :—(49, 125, 163, 303, 306, 318, 327, 340, 351, 397, 401) இந்த இருவரும் ஒருவரே. **நற்றிணை**, 18-ஆம் செய்யுளிலும், **புறநானூறு** 209-ஆம் செய்யுளின் பின்னுள்ள வாக்கியத்திலும் மூவனென்று ஓர் உபகாரியின் பெயர் வந்திருத்தலால் மூவனென்ற பெயரொன்று பண்டைக் காலத்தில் வழங்கி வந்ததென்று தெரிகிறது. இவர் நெய்தற் றிணையில் மிகப் பயின்றவர். அதன் வளங்களை விளங்கப் பாடுதலில் மிக்க ஆற்றலையுடையவர். சேரன், பாண்டியன் என்னும் முடியுடை வேந்தர் இருவராலும் திருக்கோவலூரை ஆண்ட காரியென்னும் வள்ளலாலும் ஆதரிக்கப் பெற்றவர். சேர நாட்டுக் கடற்கரைப் பட்டினமாகிய தொண்டியும் அந் நாட்டின் கண்ணதாகிய மரந்தையும் பாண்டி நாட்டுக் கடற் கரைப் பட்டினமாகிய கொற்கையும், நடு நாட்டின் கண்ண தாகிய கோவலூரும் இவராற் பாராட்டப் பெற்றிருத்தலின் இவர் அந்நகரங்களில் இருந்தவரென்றும் இவர் காலத்தில் அவைகள் மிக்க விளக்கமுற்றிருந்தன வென்றும் கொள்ள லாம். அகநானூற்றிற் பெண்ணை யாற்றை இவர் சிறப்பித் திருக்கிறார். ‘கடலினும் நட்பு பெரியது’ (ஐங். 184), ‘எப் பொழுதும் மொழியத் தக்க சொற்கள் மெல்லிய வினிய மேவரு தகுந’, ‘நல்கூர்ந்தார் வயின் நயனில ராகுதல் தகாது’ என்பன இவர் எடுத்துக் காட்டும் சில நீதிகளாகும். ஐங்குறு நூறு, கிழவற்குரைத்த 13-ஆம் பத்தில் தலைவி மிக்க இளமையுடையாள் என்றதற்கேற்ப அவளுடைய பேதைப் பருவ விளையாட்டுக்களை அழகாக உரைத்திருத்தல் படித்து இன்புறற்பாலது. தலைவன் தன் நாட்டையும் கொடுத்துத் தலைவியை மணக்கத் துணிந்தனன் என்று தலைவியின் பெறற்கருமையை இவர் பாராட்டியிருக்கிறார்; ஐங்குறு. 147. எட்டுத் தொகையில் இவர் இயற்றிய வேறு செய்யுட்கள்-116 (நற்றிணை-10; ஐங்குறுநூறு, நெய்தல்-100; அக நானூறு-6)

**அரிசில்கிழார்** (193) :—கொள்ளிடத்தின் வடபால் அரியிலூர் அல்லது அரியில் என்று வழங்கும் ஓரூரின் பெயர் அரிசில் என்பதன் மரூஉவாகக் கருதப்படுகின்றது; ‘‘அரிசிற்கரை’’ என்று மைஸூர் ஸம்ஸ்தானத்திலும் ஓர் ஊர் உள்ளது. கிழார் - உரியவர். கிழாரென்பது வேளாளர்க்கேயுரிய சிறப் புப்பெயராக இருந்ததென்று தெரிதலின், இவர் வேளாண் மரபினராக இருத்தல் கூடும். இஃது, ‘‘ஊரும் பேரும்’’

(தொல். மரபு. 74) என்னும் சூத்திரத்தின் உரையிற் காட்டிய பெயர்களாலும், திருத்தொண்டர்புராண வரலாற்றின் 2-ஆம் செய்யுளில் எடுத்துக்காட்டிய பெயர்களாலும் அறியலாகும். கடையெழுவள்ளல்களுள் ஒருவனாகிய பேகனைப் பாடியிருத்தலின் இவர் அவன் காலத்தினராக நினைக்கப் படுகின்றார்; அவனால் துறக்கப்பட்ட கண்ணகி யென்பவளை அவனோடு சேர்த்தல் வேண்டி அவனைப் பாடினர்; இந்தக் கண்ணகி சிலப்பதிகாரத்திற் கூறப்பட்ட கண்ணகியல்லள். அதியமான் தகடூர்பொருது வீழ்ந்த எழினியின் பிரிவாற்றாது வருந்தி இவர் புலம்பினர்; பதிற்றுப்பத்தில் எட்டாம்பத்தைப் பாடித் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையிடம் ஒன்பது நூறாயிரங் காணம் பரிசில்பெற்று அவன்பால் அமைச்சுத்தொழில் பூண்டு விளங்கியவர். தகடூர்யாத்திரை யென்னும் நூலில் இவராற் பாடப்பட்ட பாடல்களும் சில உள்ளனவென்பது தொல்காப்பியப் புறத்திணையியலில் 8, 12 - ஆம் சூத்திர முதலியவற்றிற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையால் விளங்குகின்றது. திருவள்ளுவமாலையிலுள்ள, ''பரந்த பொருளெல்லாம்'' என்னும் 13-ஆம் செய்யுள் இவரியற்றியதாகக் கூறப் பட்டிருத்தலின், திருவள்ளுவர் காலத்தினராகிய கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவராக இவரைச் சொல்லுதற்கு இடமுண்டு. இவர் பெயர் அரியில்கிழாரென்றும் வழங்கும். புறநானூற்றில் இவராற் பாடப்பெற்ற குதிரைமறம், தானைமறம், பேய்க்காஞ்சி, மகட்பாற்காஞ்சி என்னும் துறைகள் அறிந்து இன்புறற்பாலன. பதிற்றுப்பத்து, 8-ஆம் பத்தின் இறுதியில் அமைந்திருக்கும் ''பாடிப்பெற்ற பரிசில் : தானும் கோயிலாளும் புறம்போந்து நின்று கோயிலிலுள்ளவெல்லாம் கொண்மினென்று காணம் ஒன்பது நூறாயிரத்தொடு அரசு கட்டிற் கொடுப்ப அவர் யான் இரப்ப இதனை ஆள்கவென்று அமைச்சுப்பூண்டார்'' என்னும் வாக்கியத்தால் இவருடைய குணவிசேடங்களும் மேம்பாடும் விளங்கும்; (கோயிலாள் - பட்டத்தேவி; காணம் - ஒருவகைப் பொற்காசு; அரசு கட்டில் - சிங்காதனம்; அமைச்சு - மந்திரி வேலை). மேற் கூறிய சேரவரசனும் உக்கிரப்பெருவழுதியும் பேகனென்னும் வள்ளலும் அதியமான் தகடூர்பொருதுவீழ்ந்த எழினியும் இவர் காலத்தவர். இவருடனிருந்த புலவர் : கபிலர், பரணர், பெறுங்குன்றூர்கிழார், பொன்முடியார் முதலியோர்.

எட்டுத் தொகையில் இவர் இயற்றியுள்ள வேறு செய்யுட்கள் 17 (பதிற்றுப்பத்து - 10, புறநானூறு - 7)

**அழிசி நச்சாத்தனுர்** (271) :—அழிசி என்ற சிற்றரசனெருவன் ஆர்க்காடு என்ற ஊரையுடையவன் என்பது இந்நூல் 258, நற்றிணை, 190-ஆம் செய்யுட்களால் தெரியவருகிறது. ‘ ந ’, என்பது சிறப்புப்பற்றி வந்தது. “ ஒருநாள் நட்புப் பூண்டேன் ; அது பல நாள் எனக்குத் துன்பம் தருவ தாயிற்று ” என்று தலைவி தலைவனது பரத்தைமையைக் குறிப்பித்தலாக அமைத்திருப்பது பாராட்டற் குரியது. அழிசியென்பது அழுசி எனவும் வழங்கும்.

**அள்ளூர் நன்முல்லையார்** (32, 67, 68, 93, 96, 140, 157, 202, 237) :—அள்ளூரென்பது பாண்டி நாட்டில் சிவகங்கைக் கண்ணதோர் ஊர் ; இது, “ கொற்றச் செழியன், பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவென், ஒண்டொடி ” (அகநா. 46) என்னும் இவர் பாடலால் விளங்குகின்றது ; “ கிள்ளை, வளைவாய்க் கொண்ட வேப்ப வொண்பழம், புதுநா ணுழைப் பானுதிமாண் வள்ளுகிர்ப், பொலங்கல வொருகா சேய்க் கும் ” என்னும் உவமையும், “ அரும்பனி யச்சிரந் தீர்க்கும், மருந்துபிறி தில்லையவர் மணந்த மார்பே ”, “ அவர் நமக், கன்னையுமத்தனு மல்லரோ ” (குறுந். 67, 68, 93) என்பன வும் இவருடைய நுண்மாண் புலமை முதலியவற்றை விளக்கும். இவர் பெயர் அள்ளூர் நன்முல்லை யெனவும் வழங்கும். எட்டுத் தொகையில் இவரியற்றிய வேறு செய்யுட் கள் - 2 (அகநா. 1 ; புறநா. 1)

**அறிவுடைநம்பி** (230) :—இவரும் பாண்டியன் அறிவுடைநம்பி என்பாரும் ஒருவரென்றே தெரிகிறது. “ அறிவுடையரசன் இறைகொள்ளும் நெறியை அறிந்து கொள்ளின் அவன் நாடு கோடி பொருளை ஈட்டிக் கொடுத்துத் தானும் மிகவும் தழைக்கும் ” என்று பிசிராந்தையார் இவருக்குச் செவியறி வுறுத்துவதனுல் (புறநா. 184) இவர் ஒரு காலத்தில் குடி களிடத்தில் அன்பு கெடப் பொருள் வவ்விஞரோ வென்று கருத இடமுண்டு. புதல்வரில்லார்க்கு இருமைப் பயனு மில்லையென்று இவர் பாடியுள்ளார் ; புறநா. 188. நெய்தலை யும் குறிஞ்சியையும் இவர் புனைந்து பாடியிருக்கின்றனர். எட்டுத்தொகையுள் இவர் பாடியனவாக உள்ள வேறு பாடல்கள் : 3 (நற் ; 1, அகநா. 1 ; புறநா. 1)

**ஆசிரியன் பெருங்கண்ணனுர்** (239) :—ஆசிரியன் என்ற

அடைமொழி வேறு சில புலவருக்கும் உண்டு. "கிழவோற்குத் தொடி ஞெகிழ்ந்தன ; தோள் சாயின ; இனி விடப்படும் நாண் உண்டோ?" என்று தலைவி கூறுவதாக இவர் பாடியுள்ளார்.

**ஆதிமந்தியார்** (31) :—நல்லிசைப் புலமை வாய்ந்த மெல்லியலார்களுள் இவர் ஒருவர். இவர் பெயர் மந்தியெனவும் வழங்கும். வஞ்சிக் கோனாகிய ஆட்டனத்தி என்பானை இவர் மணந்தவர். அவன் பெயர் அத்தியெனவும் வழங்கும். ஒரு சமயம் ஒரு நீர் விழாவிற் கழாரென்னும் ஊரைச் சார்ந்த காவிரித் துறையில் கணவனுடன் இவர் நீராடுகையில், கணவனைக் காவிரி வெள்ளத்திற் கவர்ந்து கொண்டது என்பதும் அதனால் மந்தியார் தம் கணவனைக் காணாது கவன்று பலவிடத்தும் தேடித் தேடிச் சென்று முடிவிற் கடற்கரையில் அரற்றி நின்றாரென்பதும் அப்போது இவரது கற்பின் பெருமையால் கடல், கரைக்கணித்தாக அவனைக் கொணர்ந்து நிறுத்தக் கண்டு இவர் மகிழ்ந்து தழுவிச் சேர்ந்தனரென்பதும் அகநா. 45, 76, 222, 236, 276, 396-ஆம் பாடல்களாலும், "இது (குறுந். 3) காதலற் கெடுத்த ஆதிமந்தியார் பாட்டு" என்ற நச்சினார்க்கினியர் உரையினாலும் (தொல். அகத். 54), சிலப். 21 : 11-5-ஆம் அடிகளாலும் உணரப்படும். **வெள்ளி வீதியார்** என்ற பெண்பாற்புலவர், பரணர் முதலியோர் இவரைப் பாராட்டியுள்ளார். **அகநா.** 147-ஆம் பாடலால் ஔவையாருக்குக் காலத்தால் முந்தியவர் வெள்ளி வீதியார் என்பதும், **அகநா.** 45-ஆம் பாடலால் வெள்ளி வீதியார்க்குக் காலத்தால் முந்தியவர் ஆதிமந்தியாரென்பதும் விளங்குகின்றன.

**ஆரிய வரசன் யாழ்ப்பிரமதத்தனார்** (184) :—ஆரிய வரசர் பலர் தமிழின்பால் ஆர்வங்கொண்டு அதனைக் கற்றமை விளங்கும். கபிலர் ஆரிய வரசன் பிரகத்தன் என்பானுக்குத் தமிழறிவுறுத்தற்குக் குறிஞ்சிப்பாட்டை இயற்றினர் என்பர். "அறிகரிபொய்த்தல் ஆன்றோர்க்கில்லை" என்று கூறி ஆன்றோரின் பெருமையை இவர் புலப்படுத்தியுள்ளார். சிலப்பதிகாரத்தில் ஆரிய மன்னரென்னும் ஒரு வகையார் கூறப்படுகின்றனர். இவர் அவர்களுள் ஒருவரோ வேறோ தெரியவில்லை.

**ஆலங்குடி வங்கனார்** (8, 45) :—ஆலங்குடி யென்னும் பெயருள்ள ஊர்கள் பல இருத்தலின் இவர் ஊர் இன்ன ஆலங்குடி

யென்று நிச்சயிக்கக் கூடவில்லே. வேறு தொகை நூல்களில் ஐந்தும் (நற். 3, அகநா. 1, புறநா. 1), திருவள்ளுவ மாலே யில் ஒரு செய்யுளும் இவர் செய்தனவாக இப்பொழுது காணப்படுகின்றன. புறத்திணைப் பாடலொழிய மற்ற எட்டுத் தொகைப் பாடல்கள் யாவும் மருதத்திணையைச் சார்ந்தன. காமக்கிழத்தியர் தலேவனே ஆடிப் பாவை போன்ருன் என்று இகழ்தலும் (குறுந். 8), உயர்குடிப் பிறந்த கற்புடை மகளிர் தம் தலேவர் கொடுமை புரியினும் அதனே மறந்து அன்பு பாராட்டுதலும் (குறுந். 45) கூறும் முகத்தால் இவர் இருவேறு மகளிருக்கும் உள்ள வேற்று மையை நன்கு புலப்படுத்துகின்ருர். இவர் பாடிய நற். 330-ஆம் பாடலும் இவ்வேற்றுமையையே காட்டும். " தலேவி தன் வயிற்றை அலேத்துக் கோடற் பொருட்டாகச் செறிந்த நம் தொடி ஒலிப்ப வீசி அவள் உறையும் சேரிக்கண் சிறிது பொழுது சூழ் வருவோம் வா, தோழீ " என்று பரத்தை தலேமகள் புறங்கூறினுளாகக் கேட்டு மொழிந்தாளென்று (அகநா. 106) இவர் கூறியிருப்பதும் பரத்தையின் கொடுமையையே காட்டுகிறது.

**ஆலத்தூர் கிழார்** (112, 350) :—ஆலத்தூரிற் பிறந்தவர் இவர். ஆலத்தூர் என்ற பெயருள்ள ஊர்கள் தமிழ்நாட்டில் பல உள்ளன. இதனே இன்ன ஆலத்தூரென்று சொல்லமுடிய வில்லே. இவர் வேளாளர். " கணந்துட் பறவை ஆறலே கள்வர் வருவதையறிந்து ஒலிக்கும் இயல்புடையது " (குறுந். 350) என்பதை இவர் குறித்துள்ளார். " பிறர் கூறும் பழிமொழியை அஞ்சினுல் காமம் மெலிவடையும்; பிறர் பழித்தல் அறும்படி அக்காமத்தை விட்டு விடின் எனது பெண்மை நலனும் கற்பும் அழிந்து விடும் " என்று தலேவி கூறுவதாகக் காமம் கவ்வை இவை இரண்டாலும் வரும் துன்பங்களே அழகாகக் குறித்துள்ளார்; குறுந். 112. நன்றியறிவும், அரசர்களே இடித்துக் கூறும் மனவலியும் உபகாரிகளின் இயல்பை வெளிப்படுத்தும் அன்புடைமையும் போர் செய்யும் முறையை விளக்கும் இயல்பும் பொருள் களின் இயற்கை நலனேப் புலப்படுத்தும் நுண்ணறிவும் உடையவர் இவர். இவர் செய்தனவாகப் புறநானூற்றில் 5 செய்யுட்கள் காணப்படுகின்றன. இவராற் பாடப்பட் டோர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனும் சோழன் நலங்கிள்ளியுமாவர்.

**இடைக்காடனுர்** (251) :—இடைக்காடென்னும் ஊரினராதல் பற்றி இவர் இப்பெயர் பெற்ருர். இடைக்காடென்பது பட்டுக்கோட்டை தாலூகாவில் உள்ளது. இவர் சாதியில் இடையர். "இவர் கபிலருடைய தோழர்; மற்றப் புலவர்களிடத்தும் அன்புடையவர்; பெரும் பொருளைச் சிறு கவியுள் அடக்கும் இயல்பினர்; கவி செய்யும் ஆற்றல் மிக்கார்" என்பது திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தால் அறியலாகும். இவர் கூறும் உவமைகள் மதிக்கற்பாலன. இவருடைய செய்யுட்களை உற்று நோக்குமிடத்துப் பெரும்பான்மையாக முல்லைத்திணை, மழை, இடைச்சாதி என்பவற்றின் இயல்புகளும் சிறு பான்மையாக மருதத் திணை வளமும் அமைந்திருப்பது விளங்கும். சில பாடல்கள் இடைக்காடர் ஊசி முறி என்று பழைய உரைகளிற் காணப்படுகின்றன. இதனுல் ஊசி முறி என்ற நூலொன்று இவரால் இயற்றப்பட்டதென்று தெரிகிறது. ஊசி - எழுத்தாணி. இவராற் பாடப்பட்டோன் சோழன் குளமுற்றத் துத்துஞ்சிய கிள்ளிவளவன். வேறு தொகை நூல்களில் இவர் பாடியவை - 26 (நற். 3; அகநா. 6; புறநா. 17). அன்றியும் இவர் பாடிய செய்யுளொன்று திருவள்ளுவ மாலையில் உள்ளது.

**இருந்தையூர்க் கொற்றன் புலவனுர்** (335) :—திருக்கோவலூர் தாலூகாவில் இருந்தையென்று ஓர் ஊர் உள்ளது. இருந்தையூர் என்பது அதுவாக இருக்கலாமென்று தோற்றுகிறது. இந்த ஊரிலேயே கருங்கோழி மோசியார் என்ற வேருேர் இடைச்சங்கப் புலவர் இருந்தனரென்று தெரியவருகிறது; சிலப். உரைப். அடியார்.

**இளங் கீரந்தையார்** (148) :—கீரன் தந்தையார் என்ற தொடர் கீரந்தையார் என்று மருவியது. கீரந்தையார் என்று இடைச்சங்கப் புலவருள் ஒருவர் இருந்தார் என்பது (சிலப். அடியார்.) தெரியவருகிறது. பரிபாடலில் ஒரு பாட்டை எழுதியவரும் திருவள்ளுவ மாலையில் 'தப்பா முதற்பாவாற்' என்னும் செய்யுளை இயற்றியவரும் கீரந்தையார் என்று தெரிகிறது. அவருக்கும் இவ்விளங் கீரந்தையாருக்கும் தொடர்புண்டோ இல்லையோ தெரியவில்லை. கீரந்தையாரினும் இவர் இளைஞராயிருத்தல் பற்றி அவரினும் வேறுபடுத்த இவர் பெயர் இளங்கீரந்தையாரென்று வழங்கியிருத்தல் கூடுமோவென்று தோற்றுகிறது.

**இளங்கீரனார்** (116) :—இவரும் எயினந்தை மகனார் இளங்கீரனாரென்பவரும் ஒருவரேயென்று சிலர் கூறுவர். அங்ஙனமாயின் இவர் வேடர் மரபினர். இவர் பாலைத்திணையைப் பலவாறு பாடியுள்ளார். தலைவியின் இனிமைக்கு வினை முடித்தலால் வரும் இனிமையையும், மூங்கிலில் காற்றடித்தலால் உண்டாகும் ஓசைக்கு யானையின் நெட்டுயிர்ப்பையும், தலைவன் நெஞ்சம் தலைவியுடன் ஒன்றுபட்டுக் கரைவதற்கு ஈரம் காயாத பசிய மட்கலம் பெருமழையிற் கரைவதும் இவர்காட்டும் அரிய உவமைகளாகும்; நற். 3, 62, 308. வழக்கமாக மகளிர் பிறை தொழுதலையும் சுவரிற் குறியமைத்து நாளெண்ணுதலையும் (அகநா, 239, 289) இவர் குறித்துள்ளார். 'சோழன் உறந்தை', 'உதியன் மண்டிய ஞாட்பு', 'பொறையன் கொல்லி' என்ற தொடர்களால் இவர் சோழனையும் சேரரையும் பெயர் கூருமற் குறித்திருக்கிறார். பொருந்தில் என்னும் ஊரினராகிய இளங்கீரனாரென்னும் புலவரொருவர் புறநானூற்றில் ஒரு செய்யுளையும் அகநானூற்றில் இரண்டு செய்யுட்களையும் பாடியுள்ளார். அவருக்கும் இவருக்கும் ஏதேனும் தொடர்பிருக்குமோ இல்லையோ என்பது தெரியவில்லை. எட்டுத் தொகையில் இவரியற்றியுள்ள செய்யுட்கள் 14 (நற். 6 ; அகநா. 8)

**இளம்பூதனார்** (334) :—'அலைகளின் நீர்த்துளிகள் தம் ஈரமாகிய புறத்தை நனைப்ப அக்குளிரை வெறுத்துக் காக்கைகள் கடற்கரைச் சோலையில் தங்கும்' என்று இவர் அவற்றின் இயல்பை அறிந்து கூறுவது பாராட்டத்தக்கது.

**இறையனார்** (2) :—மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுள் இறையனாரென்ற பெயரால் வழங்கப் பெறுவர் என்பர். இவரது வரலாறு இந்நூலில் 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் இரண்டாம் செய்யுளின் இறுதியில் விரிவாக உள்ளது.

**ஈழத்துப் பூதன் றேவனார்** (343) :—இவர் வேறு ; 189, 360-ஆம் செய்யுட்களைப் பாடிய மதுரை யீழத்துப் பூதன்றேவனார் வேறு. இவர் குறிஞ்சித் திணையைக் குறித்துப் பாடியுள்ளார். யானையைத் தாக்கிய மிகுவலி யிரும்புலியேற்றை அந்த யானையின் முயற்சி யின்றி அதன் கொம்பினுற் குத்தப்பட்டு இறந்து கிடத்தலை அழகுபட இவர் கூறியுள்ளார்.

**உகாய்க்குடி கிழார்** (63) :—உகாய்க்குடி யென்னும் ஊரிற் பிறந்தவர் இவர். "ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் கில்லென"

என்று இவர் கூறும் பொருட்சிறப்பு அருமையாக வுள்ளது. இங்கே ஈதலைத் துய்த்தலுக்குமுன் இவர் அமைத்துள்ள நயம் படித்து இன்புறற்பாலது.

**உருத்திரனார்** (274) :—இவருக்கு அமைந்திருப்பது தெய்வப் பெயர். பாலை வழியின் இன்னாமையையும் தலைவியை உள்ளிச் செல்லின் அது கடத்தற்கு இனியதாக இருத்தலை யும் நன்றாக இவர் கூறியுள்ளார்.

**உரோடகத்துக் கந்தரத்தனார்** (155) :—இப்பெயர், 'உரோட கத்துக் காரத்தனார்', 'ஊரோடகத்துக் கந்தரத்தனார்', 'ஒரோடகத்துக் கந்தரத்தனார்' என்று பலவாறு பிரதிகளில் உள்ளது. 'உரைகடம்' என்னும் பெயர் உள்ள மூன்று ஊர்கள் செங்கற்பட்டு ஜில்லாவில் இருக்கின்றன. 'உரோடகம்' என்பது அவற்றுள் ஒன்றன் திரிபாக இருக்க லாமென்று தோற்றுகிறது. உழவர் காலையில் விதைக்க எடுத்துச் சென்ற வட்டிகளை மாலையில் வறியனவாக இல்லாமற் போதைக் கொணர்வர் என்று கூறுகிறார். தலை விக்குப் பொருளின் உயர்வைப் புலப்படுத்தத் தலைவன் முல்லை படர்ந்த நொச்சியினது கிளையின் உயர்வைக் காட்டு வதாக இவர் குறித்துள்ளார். அலர் தூற்றும் பெண்டிரை நரகம் புகுதற்கு உரியவரென்று தலைவியின் கூற்றில் அமைத்திருக்கிறார். எட்டுத் தொகையில் இவரியற்றிய வேறு செய்யுட்கள் 4 (நற். 1 ; அகநா. 3)

**உலோச்சனார்** (175, 177, 205, 248) :—இவர் நெய்தற்றிணை யையே மிகுதியாகச் சிறப்பித்துள்ளார். இதனாலும் தலைவி யின் கூற்றாக, 'கழிசூழ்படப்பைக் காண்டவாயில்.........எம் அழுங்க லூரே' (நற். 38) என்று கூறுவதனாலும் இவர் நெய்தனிலத்தைச்சார்ந்தவர் என்று ஊகிக்கலாம். கடலில் உப்பெடுத்தலை 'வானம் வேண்டா உழவு' (நற். 254) என்கின்றார். பொறையாறு என்ற ஊரினனான பெரியன் என்பானையும் சோழன் இராச சூயம் வேட்ட பெருநற் கிள்ளியையும் இவர் குறித்துள்ளார். வியப்பைப் புலப் படுத்தப் பெண்டிர் தம் மூக்கினுச்சியிற் சுட்டுவிரலைச் சேர்த்தலையும், சிறுமியர் வண்டல் மண்ணாலே பாவை செய்து விளையாடுதலையும் (நற். 149, 191) வழக்கங்களாகக் கூறியுள்ளார். உலோச்சென்பது சைனர்கள் செய்து கொள்ளும் ஒரு கிரியை. அதனால் இவர் சைனரென்று கொள்ளுதற்கு இடமுண்டு. இவர் வாக்கில் எருமை மறம்

என்னுந் துறை விளங்கக்கூறப் பெற்றுள்ளது; புறநா. 273. எட்டுத் தொகையில் இவரியற்றிய வேறு செய்யுட்கள் 31 (நற். 20; அகநா. 8; புறநா. 3)

**உழுந்தினைம் புலவன்** (333) :—ஒரு காரியம் செய்கையில் அது நிறைவேருமற்போனல் உண்டாகும் வருத்தத்தை இவர் ' பணிக்குறைவருத்தம் ' என்று கூறியுள்ளார்.

**உறையனர்** (207) :—சுரஞ்செல் மாக்கட்கு ஒரு துணையுமின் றென்பதைக் குறிக்க இவர், '' இனந்தீர் பருந்தின் புலம்பு கொடெள்விளி......உயவுத் துணையாகும் '' என்கிருர்.

**உறையூர்ச் சல்லியன் குமாரனர்** (309) :—உறையூரைச் சார்ந்த புலவர் பலர் உளர். ஒரு காலத்தில் அது கல்வியிற் சிறந் திருந்த தென்பது இதனுற் புலனுகும். பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்கு வாயில் நேர்ந்தமைக்குத் தோழி உழவர் தம் தொழிலை முடிப்பாராகி வரப்பில் வாடும்படி களைந் தெறிந்த நெய்தல் மீட்டும் தம்மை நீக்கிய வயலினிடத்து மலர்கின்றதை உவமையாகக் காட்டியுள்ளது பாராட்டற் பாலது. களையைக் களைந்த இடத்திலேயே போடக்கூடா தென்பதை இவர் அறிந்துள்ளாரென்று தெரிகிறது.

**உறையூர்ச் சிறுகந்தனர்** (257) :—தலைவன் பிரிந்த வழிக் காம மாகிய பகை தலைவியை இகலும் என்கிருர். பலாமரம் நிரம்பக் காய்த்துள்ளமையை அழகுபட வருணித்துள்ளார்.

**உறையூர்ப் பல்காயனர்** (374) :—யாப்பருங்கலம், யாப்பருங் கலக்காரிகை என்பவற்றின் உரைகளால் பல்காயனர் என்ற ஒருவர் யாப்பிலக்கணஞ் செய்துள்ளமை தெரியவருகிறது. அவரும் இவரும் ஒருவரோ வேருே என்பது தெரியவில்லை. ஊர் மயக்க மடைந்துள்ளமைக்குத் தூக்கணங் குருவி பனை மேற் ருெடுத்த கூட்டின் மயக்கத்தை உவமை கூறுகிருர். சில பிரதிகளில் இவர் பெயர் ' பராயனர் ' என்று காணப் படுகிறது.

**உறையூர் முதுகண்ணன் சாத்தனர்** (133) :—' முதுகண் ' என்பது பிராயத்தாலும் அறிவாலும் முதிர்ந்து, அரசர்க்கும் பட்டத்தேவிகளுக்கும் உசாத்துணையாகவிருந்து நீதிகளைச் செவியறிவுறுத்தும் ஆண்பாலார் பெண்பாலார்களுக்குரிய பெயராகச் சிலாசாசன முதலியவற்றிற் காணப்படுகின்றது; '' முற்றிழை மகளிர்க்கு முதுக ணுமெனா '' (பெருங். 1. 36 : 198) என்று வருதலும் காண்க; இவர் உறையூர் அரசர்பால் அத்தொழிலை உடையவராக இருந்தார் போலும்; இவராற்

பாடப்பட்டோன் சோழன் நலங்கிள்ளி; இவர் காலத்துப் புலவர் அவனைப் பாடிய ஆலத்தூர் கிழாரும் கோவூர் கிழாருமாவர்; இவர் சிறந்த குடியிற் பிறந்தவருக்குத் தாமரைப் பூக்களையும், வளர்தல் முதலியவற்றை யடைந்த பொருள் குறைதல் முதலியவற்றையடையு மென்பதற்குத் திங்களையும் உவமை கூறியிருத்தலும், அருளுங்கொடையும் வெற்றிக்கும், அவையின்மை தோல்விக்கும் காரணமென்பது புலப்பட, "அருள வல்லை யாகுமதி யருளிலர், கொடாமை வல்ல ராகுக, கெடாத துப்பினின் பகையெதிர்ந் தோரே" (27) என்று விளக்கி யிருத்தலும் நன்கு மதிக்கற்பாலன; எட்டுத் தொகையுள் குறுந்தொகைச் செய்யுளையன்றி இவர் செய்தனவாகப் புறநானூற்றில் 5 செய்யுட்கள் உள்ளன.

உறையூர் முதுகூத்தனுர் (முதுகூற்றனுர்) (353, 371):— "வென்றெறி முரசின் விறற்போர்ச் சோழர், இன்கடுங் கள்ளி னுறந்தை" என்று இவரே கூறியிருத்தலால் தம்முடைய ஊரில் இவர் அன்புடையவரென்பதும், அவ்வூர் அரசராகிய சோழரால் நன்கு மதிக்கப் பெற்றவரென்பதும் வெளியாகின்றன; "உள்ளது, தவச்சிறி தாயினு மிகப்பல ரென்னுள், நீணெடும் பந்த ரூண்முறை யூட்டும், இற்பொலி மகடூஉ", (புறநா. 331) என்று கற்புடை மங்கையி னியல்பையும், "தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண், பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார் - நாவிற், குயலில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ், செயலில்லை யென்னுந் திரு" (திருவள்ளுவமாலை) என்று திருக்குறளின் சிறப்பையும் பாராட்டி யிருத்தல் மதிக்கற்பாலது; இவர் வாக்கிற் பெரும்பாலுங் காணப்படுவது பாலைநிலத்தி னியல்பு; இவர் செய்தன வாகத் தெரிகின்ற வேறு பாடல்கள் 5 (அகநா. 3; புறநா. 1; திருவள்ளுவ. 1)

உறையூர் முதுகொற்றனுர் (221, 390): இடையர் கறந்த பாலை வீட்டிற் கொடுத்துவிட்டு இனநிரை இருக்குமிடத்துக்குக் கூழொடு பெயர்தலையும் ஆறலைகள்வர் வணிகர் கூட்டத்தை வழிப்பறிக்க முயல்வதையும் இவர் குறிப்பித்துள்ளார்.

ஊண்பித்தையார் (232):—இப்பெயர் ஊண்பித்தை யென்றும் பிரதிகளில் உள்ளது. இவர் பெண்பாலார். இவர் பாடிய செய்யுளின் பழைய கருத்து, பிரிவிடைத் தோழி வற்புறுத் தியதாக உள்ளது. இச்செய்யுள் தலைவியின் கூற்றே என்று ஐயுறும் வண்ணம் அமைந்திருக்கிறது.

**எயிற்றியனார்** (286): தலைவன் தோழியிடத்துத் தலைவியை "உள்ளிக் காண்பென் போல்வன்" என்று கூறுங்கால் அவளை உள்ளுதற்குரிய நலன்களைக் கூறுவதாகச் செய்யுள் செய்திருப்பது பாராட்டற்குரியது. இவர் பெயர் காரணப் பெயராக இருக்கலாமென்று தோற்றுகிறது.

**ஐயூர் முடவனார்** (123, 206, 322): இவருக்கு முடவனாரென்னும் பெயர் சினையால் வந்ததுபோலும்; ஐயூரென்பது சோழ நாட்டகத்ததோர் ஊர். இவர் நடந்து செல்லுதற்கு இயலாத முடவராதலின். தாமான் தோன்றிக்கோனை அடைந்து வண்டியிழுத்தற்குப் பகடுவேண்டுமென்று பாடி, அவன் பகடுகளும் பல பசு நிரைகளும் ஊர்தியுங் கொடுக்கப் பெற்று வாழ்ந்தவர்; இறந்தோருடம்பைத் தாழியாற் கவித்தல் உண்டென்பதும் வீரச் சிறப்பும் கொடைச் சிறப்பும் இவர் பாடல்களிற் காணப்படுகின்றன. இவராற் பாடப்பட்டோர் ஆதனெழினி, தாமான் தோன்றிக்கோன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சியமாறன் வழுதி யாவர். "அறவ ரறவன் மறவர் மறவன், மள்ளர் மள்ளன் றொல்லோர் மருகன், இசையிற் கொண்டான்" (புறநா. 399) என்பது இவர் தாமான் தோன்றிக் கோனைப் பாராட்டிய பகுதி. இவர் செய்தனவாகத் தொகை நூல்களிற் காணப்படும் வேறு செய்யுட்கள் 7. (நற். 2; அகநா; 1. புறநா. 4)

**ஒக்கூர் மாசாத்தியார்** (126, 139, 186, 220, 275):—முல்லைக் கொடி மலர்ந்திடுத்தலை அது நகுதல் போலும் என்றும், காட்டுப் பூனையை அஞ்சிப் பெட்டைக்கோழி தன்குஞ்சுகளை ஒருங்கு சேர்க்கும் பொருட்டு அழைத்துக் கூவும் என்றும் கூறுகிறார். புறநானூற்றில் ஒருமறக்குடி மக்களின் வீரச் செயல் இவரால் விசேடித்துப் பாராட்டப் பெற்றுள்ளது. இவர் பெண்பாலார். இவர் பாடல்கள் முல்லைத் திணையைப் பற்றி வருவன. ஒக்கூர் என்பது பாண்டி நாட்டில் திருக்கோஷ்டியூர்ப் பக்கத்தேயுள்ள ஓர் ஊர். இவர் பாடிய வேறு செய்யுட்கள் - 3 (அகநா. 2; புறநா. 1)

**ஒருசிறைப்பெரியனார்** (272):—இவர் தலைவியினுடைய கண்களுக்கு அவளது தன்னையர் கலையில்மேல் எய்த குருதி தோய்ந்த அம்பை உவமை கூறியுள்ளமையும், தேர்ப்பாகன் தலைவனை ஆற்றுவிப்பதாகக் கூறியுள்ளமையும் சிறந்த செய்திகளாகும். நாஞ்சில் வள்ளுவனைப் பாடிப் பரிசில்

பெற்றவர். நாஞ்சில் மலையின் வளத்தையும் அதன் தலைவனது இயல்பையும் இவர் பாராட்டி யிருக்கின்றார். இவர் பாடல்கள் முல்லையையும் குறிஞ்சியையும் பற்றியவை. இவரியற்றிய வேறு பாடல்கள் - 2 (நற். 1 ; புறநா. 1)

**ஓதஞானி** (227):—ஓதஞானி - பரந்தஞானி ; வடசொற்றொடர். தலைவன் சிறைப்புறத்தானாக அவன் கேட்கும்படி தோழி தலைவியின் இற்செறிப்பை இதழ் குறைந்த கூழை நெய்தல் மலர் மேல் ஏற்றி இவர் குறிப்பித்திருப்பது ஒரு நயமாகும்.

**ஓதலாந்தையார்** (12, 21, 229):—ஆதன் தந்தை யென்பது ஆந்தை யென்று மருவியது. பாலைத் திணையின் இயல்பைப் பாடுதலில் மிக்க ஆற்றலுடையவர். பாலைத்திணையில் பிரிதல் நிமித்தமே பயின்றுவரினும் 'தலைவி தலைவனை மணந்து அவனுடன் இனியளாய் இன்று வரும்' எனக் கேட்ட செவிலி அதனை நற்றாய்க்குக் கூறும் செய்யுளை ஈற்றில் அமைத்து இத்திணைக்கு மங்கல முடிபு காட்டியிருத்தல் மிக அழகாயுள்ளது. தாம் அன்பு வைத்திருப்பவருடைய அரிய பண்புகளை நினைக்குந்தோறும் ஒருவர்க்குற்ற வழிநடைத் துன்பம் முதலியன நீங்குமென்பதை இவர் தெரிவிக்கிறார். ஒரு காதலி தான் கருதியவனையே கணவனாகக் கோடல் வேண்டுமென்று நினைப்பாளென்றும் அவள் விரும்பும் தலைவனுக்கு மணஞ் செய்துகொடுக்க விருப்பமற்ற தாயை அறனில் தாயென்றும் தீ வினையை 'அறனில் பால்' என்றும் அந்தணர்க்குரிய கொள்கையைக் கூறுமிடத்து, 'அறம்புரி பெருமறை நவின்ற நாவிற், றிறம்புரிகொள்கை' என்றும் அறத்தைச் செய்வோர் அன்பைக் கருதுவது தகாது என்பதை, 'அன்பில் அறனும்' என்றும் இவர் கூறுகிறார். இவர் செய்யுட்களில் சொல் நயம் பொருள் நயங்களை அதிகமாகக் காணலாம். குறுந்தொகைச் செய்யுட்களையன்றி இவர் ஐங்குறுநூற்றில் நான்காம் நூறாகிய பாலைத்திணையைப் பாடியவர்.

**ஓரம் போகியார்** (10, 70, 122, 127, 384):—இவர் ஐங்குறுநூற்றில் மருதத்தைப் பொருளாகவுடைய முதல் நூறு செய்யுட்களை இயற்றியவர். மருதத்திணையில் மிகவும் பயின்றவர். தமிழ் நாட்டு வேந்தர் மூவராலும் பிற உபகாரிகளாலும் நன்கு மதிக்கப் பெற்றவர். இவருடைய பாடல்களில் 106 மருதத் திணையின் வளத்தையே புலப்படுத்துவன. இவரால் பாடப்பட்டோர் சேரமான் ஆதனவினி, சோழன் கடுமான் கிள்ளி, மத்தி, விரான் என்னும் இவர்கள்.

இவர் பாடலில் வந்துள்ள ஊர்கள் : ஆமூர், இருப்பை, கழார், தேனூர் என்பன ; நதிகள் : காவிரி, வையை என்பன ; விழா : இந்திரவிழா ; நோன்பு : தைந்நீராடல், எட்டுத் தொகையில் இவர் இயற்றிய வேறு செய்யுட்கள்–5 (நற் 2 ; அகநா. 2 ; புறநா. 1)

**ஓரிற்பிச்சையார்** (277) :—அறிவர் பெறும் உணவை 'ஓரிற் பிச்சை' என்று குறித்தலின் இப்புலவர் இப்பெயருடையவர் ஆனூர். ஓரிற் பிச்சையின் சிறப்பு மிகவும் பாராட்டற்பாலது. பெரியோர்கள் ஓரில்லைத் தாண்டிப் பிச்சை எடுப்பதில்லை.

**ஓரேருழவனார்** (131) :—வினைமுற்றி மீளும் தலைமகன் தலைமகளைக் காண்டற்கு விரையும் தன் நெஞ்சிற்கு ஈரச் செவ்வியில் விதை விதைத்தற்பொருட்டுக் கொல்லையை அடைதற்கு விரையும் ஓரேருழவனை உவமை கூறிய சிறப்பால் இவர் இப்பெயர் பெற்றனர் ; இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. தம்முடைய செய்யுளில் இல்லறத்தை வெறுத்துக் கூறுதலின் இவர் துறவறத்தில் பற்றுடையவரென்று கருத இடமுண்டு. இவர் இயற்றிய வேறு செய்யுள் புறநா. 193. இந்த 131-ஆம் செய்யுளின் ஆசிரியர் பெயருக்கு 'நக்கீரர்' என்னும் பிரதிபேதம் காணப்படுகிறது.

**ஔவையார்** (15, 23, 28, 29, 39, 43, 80, 91, 99, 102, 158, 183, 200, 364, 388) :—இவர் அதியமான் நெடுமானஞ்சியிடம் அமுதமயமாகிய நெல்லிக்கனி பெற்று அவனைப் புகழ்ந்தார். இது புறநானூறு, 91-ஆம் செய்யுளாலும், திருக்குறள், 100-ஆம் செய்யுளுக்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரையாலும், " பூங்கமல வாவிசூழ் புல்வேளூர்ப் பூதனையும், ஆங்குவரும் பாற்பெண்ணை யாற்றினையும்-ஈங்கே, மறப்பித்தாய் வாழதிகா வன்கூற்றி னுவை, அறுப்பித்தா யாமலகந் தந்து" என்னும் வெண்பாவாலும் வெளியாகின்றது. இவராற் பாடப்பட்டோர் : அதியமான் நெடுமானஞ்சி, தொண்டைமான், அதியமான் மகன் பொகுட்டெழினி, நாஞ்சில் வள்ளுவன், சேரமான் மாவெண்கோ, பாண்டியன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி யென்பார். இவரியற்றிய பாடல்கள் புறநானூற்றிலன்றி நற்றிணையிலும், அகநானூற்றிலும், தொல்காப்பிய உரையிலும், யாப்பருங்கல விருத்தியுரை முதலியவற்றிலும் காணப்

(கலித். 25) என்பன உதாரணமாகும். புறநானூற்றில் ஒரு வீரனது ஆற்றலை இவர் பாடியிருக்கும் விதம் படித்தின்புறற்பாலது (282). இவரைப் பாடியவர் பேய்மகள் இளவெயினி என்பார் (புறநா. 11). இவரியற்றிய வேறு பாடல்கள்: நற். 10; பாலைக்கலி; அகநா. 12; புறநா. 1.

**பூங்கண்ணனார்** (253):—சுரத்திற் செல்வோர் இரவில் புலிதனக்குரிய இரையை வைத்திருந்த புலால் நாற்றம் வீசும் கற்குகையினிடத்துத் தங்குவர் என்று இவர் கூறியுள்ளார்.

**பூங்கணுத்திரையார்** (48, 171):—இவர் பெண்பாலார். உத்திரையார் என்பது இவருடைய இயற்பெயர். "மீன்வலையில் மாப்பட்டாற்போல்" என்ற வழக்கு மொழி இவராற் கூறப்பட்டுள்ளது (171). தன் சிறுவன் களிறெறிந்து பட்டான் என்ற உவகை ஒருதாய்க்கு ஈன்றஞான்றினும் பெரிது என்றும், அவள் கண்ணீர்த் துளிகள் மூங்கிலில் வான்பெயத் தூங்கிய சிதரினும் பல என்றும் கூறியுள்ளார் (புறநா, 277). இவர் பாடியனவாக இப்பொழுது நாம் அறிபவை இந்த மூன்று செய்யுட்களே.

**பூதத்தேவர்** (285):—நற்றிணையில் பூதன் றேவனென்று ஒரு பெயர் காணப்படுகிறது. ஈழத்துப் பூதன் றேவன் இவரில் வேறானவர் என்று தோற்றுகிறது. விடியலிற் சிறுவர் கறப்பதற்காக எருமைகளைக் கன்றுகளோடு ஓட்டிச் செல்வர் என்றும், தலைவனது நோய்க்குத் தலைவியல்லது மருந்து பிறிதில்லை என்றும் (நற். 80) இவர் கூறுவர். "வைகல் வைகல் வைகவும் வாரார், எல்லா வெல்லை யெல்லையுந் தோன்றார்" (285) என்று தலைவி கூற்றில் இவர் அமைத்திருக்கும் அடிகள் சொல்நயம் பொருந்தியனவாக உள்ளன. இவரியற்றியவை இந்த இரண்டு செய்யுட்களே.

**பூதம் புல்லர்** (190):—'பூதம் புலவர்' என்று பிரதி பேதம் இருத்தலால் இவர் பெயரை 'பூதம் புலவர்' என்றே கொள்ளலாம். பல பசுக்கள் உள்ள தொழுவத்தில் ஒரு நல்லேறு இருக்கு மென்பது இவர் பாடலாற் றெரிகிறது. பசுக்களைப் பாதுகாப்போர் பொலிகாளை ஒன்றைவைத்துக் கொள்ளல் நலம் என்ற கொள்கை இக்காலத்திலும் நிலவி வருகிறது.

**பெருங்கண்ணனார்** (289, 310):—காமநோயின் வளர்ச்சிக்கு வளர்பிறையை இவர் உவமை காட்டியுள்ளார். பகல் கழிந்ததனால் வானம் புல்லென்றிருத்தல் தலைவன் பிரிந்ததனால்

தலைவி பொலிவழிந்திருத்தல் போன்றது என்று கூறியுள் ளார். நற். 137 - ஆம் செய்யுளும் இவர் பாடியது.

பெருங்குன்றூர் கிழார் (338) :—இவர் வேளாண் மரபினர். இவர் பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பத்தைப்பாடிச் சேர மான் குடக்கோ இளஞ் சேரலிரும் பொறையிடம் முப்பத் தீராயிரம் காணம் முதலிய பரிசில் பெற்றனர். வையாவிக் கோப்பெரும்பேகனால் துறக்கப்பட்ட கண்ணகியை அவ னுடன் சேர்த்தற்கு அவனைப்பாடி அதனையே பரிசிலாகக் கூறினர். அகப்பொருளில் குறிஞ்சித் திணையை மிகுதி யாகப் பாடியுள்ளார். தலைவி பருவங்கண்டு அழிந்தமை யையே புலவர்கள் பெரும்பாலும் கூற, இவர், " தலைவன் வரவை அறிந்து மின்னி இடித்துவந்த மழைக்கு விருந்து என்செய்கோ " என்று தலைவி தோழியிடம் கூறுவதாகப் (நற். 112) பாடியுள்ளார். தலைவன் பிரிவினால் தலைவி நலமழிந்து வாடுவதற்கு நீரின்மையால் வருந்தும் வேனிற் றவளையை உவமை காட்டியுள்ளார். மிகுந்த செல்வாக்குப் பெற்று விளங்கிய புலவருள் இவரும் ஒருவராவர். இவர் பாடியனவாக நாம் இப்பொழுது அறிபவை : நற். 4 : பதிற். ஒன்பதாம் பத்து ; அகநா. 1 ; புறநா. 4. பன்னிருபாட்டிய லில் இவர் பாடியனவாகச் சில சூத்திரங்கள் உள்ளன. சிறு மேதாவியார், சேந்தம் பூதனார், நல்லந்துவனார், மருதனிள நாகனார், நக்கீரர், பரணர் முதலியோர் இவர் காலத்தவர்.

பெருஞ்சாத்தனார் (263) :—ஒல்லையூர் கிழார்மகன் பெருஞ் சாத்தன் என்ற உபகாரி ஒருவரைப் பற்றிய செய்தி புறநா னூற்றில் (242) வருகின்றது. மகளிர் தலைவனையே தெய்வ மாகக் கொள்ளும் கற்புடையர் என்பதைக்காட்ட இவர் தோழி கூற்றில் வெறியெடுத்தலை ' வேற்றுப் பெருந்தெய்வம் பலவுடன் வாழ்த்தி ' என்று கூறுகிறார். இவர் இச் செய்யுளையன்றி வேறொன்றும் பாடியதாகத் தெரியவில்லை.

பெருந்தோட் குறுஞ்சாத்தனார் (308) :—சினை, வடிவுகளால் இவருக்கு இப்பெயர் வந்ததென்பர். வாழையால் யானை மதன் அழியும் என்பதும் யானையின் மத்தகம் தெய்வத் தன்மை பொருந்திய தென்பதும் இவர் பாட்டால் தெரிய வருகின்றன.

பெரும்பதுமனார் (7) :—உயர்ந்த கருத்தமைந்த செய்யுள் செய் தலில் இவர் வல்லவர். ஆரியக் கூத்தர் கழையிற் கட்டிய கயிற்றின்மேல் நின்று ஆடுவதும், அப்பொழுது பறை

கொட்டுவதும் இவராற் கூறப்பட்டுள்ளன. மணமகளது காலிற் பெற்றோர்களால் அணியப்பட்ட சிலம்பை நீக்குவதற்கு ஒரு சடங்கு செய்யும் வழக்கம் இவராற் குறிக்கப்படுகின்றது. இவர் தலைவனது உள்ளத்துக்குத் தலைவி இடியை உவமை கூறுவதாக (நற். 2) அமைத்துள்ளார். "ஆலமரத்தின் பழங்களை நேற்று உண்டோமே என்று நினையாமல் புள்ளினங்கள் மீட்டும் அம்மரத்தின் பாற் செல்லுதலைத் தவிரா; இரவலரும் அத்தன்மையரே; தம்மை ஆதரிப்போர் செல்வமே இவர் செல்வம்; அவர் வறுமையே இவர் வறுமை" என்பது இவர் கூறும் உயர்ந்த கருத்தாகும் (புறநா. 199). இவர் செய்த வேறு பாடல்கள்: 3 (நற். 1; புறநா. 2)

**பெரும்பாக்கனார்** (296):—பெரும்பாக்கம் என்பது ஓர் ஊர். நாரைகள் கழியிலுள்ள சிறுமீன்களை வெறுத்து வயலின் கண்ணுள்ள நெய்தல் மலர்களையும் நெற்கதிர்களையும் விரும்பும் என்று இவர் கூறியுள்ளார்.

**பேயனார்** (233 359, 400):—முல்லைத்திணை வளங்களை விளங்கப் பாடுதலில் இவர் மிக்க ஆற்றலுடையவர். ஐங்குறு நூற்றின் ஐந்தா நூறாகிய முல்லைத்திணையைப் பாடியவர் இவரே; குறுந்தொகைச் செய்யுட்கள் மூன்றும் முல்லைத் திணையைப் பற்றியனவே. அகநா. 234 இவர் செய்தது.

**பேயார்** (339):—யாப்பருங்கல விருத்தியுரையில், "கறைப்பற் பெருமோட்டு" என்னும் வெண்பா மேற்கோளாக எடுத்துக் காட்டப் பெற்று, 'இது பூதத்தாரும் காரைக்காற் பேயாரும் பாடியது' என்று எழுதி யிருத்தலாற் காரைக்காற் பேயார் என்னும் பெயருடைய ஒரு புலவர் இருந்ததாகத் தெரிகிறது; அவரும் இவரும் ஒருவரோ வேறோ யாதும் விளங்கவில்லை. அகிற்புகைக்கு மழைபெய்துவிட்ட வெண்மேகத்தை இவர் உவமை கூறியுள்ளார்.

**பேரிசாத்தனார்** (81, 159, 278, 314, 366):—வடமவண்ணக்கன் பேரி சாத்தனார் என்பவரும் இவரும் ஒருவர் போலும், "தென்கடல், முழங்குதிரை முழவின் பாணியிற் பைபயப், பழம்புண் ணுறுநரிற் பரவையி னலும்" (நற். 378) என்று கடலலையின் ஒலிக்கு முழவின் ஒலியை உவமை கூறிய சிறப்பால் இவர் பெயர்க்கு முன் 'பேரி' என்னும் அடை கொடுக்கப்பட்டது போலும்; பேரி-முழவு. அலையின் பிறழ்ச்சியால் வெண்மையாகத் தோற்றும் கடலுக்கு நிலவை

யும் செறிவால் இருண்டு தோன்றும் கானலுக்கு இருளையும் உவமை கூறியுள்ளார் ; 81. " நீயும் நின்புதல்வரும் அவர் பெறும் புதல்வரும் நீடு வாழ்க " என்று இவர் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாற னென்பானைக் கூறும் பகுதி (புறநா. 198) மிக்க நயமுடையது. " விதியே தலைவியைத் தலைவனேடு கூட்டுவித்ததன்றித் தலைவனுடைய சால்பை அளந்தறிதற்கு நாம் யார் ?" என்ற கருத்தமைந்த பாடலொன்று (366) இவர் இயற்றியுள்ளார். இவரியற்றிய வேறு பாடல்கள் : நற். 8 ; புறநா. 1.

**பேரெயின் முறுவலார்** (17) :—புன்முறுவலால் திரிபுர மெரித்த கண்ணுதற் பெருமானின் பெயரையுடையவர் இவர் ; எயில் - முப்புரங்கள். சோழநாட்டிற் காவிரியின் தென்கரையில் பேரெயில் என்று தேவாரம் பெற்ற ஒரு ஸ்தலம் உண்டு. இவர் அவ்வூரினரோ என்றும் கருதலாம். நம்பி நெடுஞ் செழியன் என்பான் இம்மையில் தான் அடைதற்குரிய இன்பங்களை யெல்லாம் அடைந்தான் என்றும் செய்ய வேண்டிய நற்காரியங்களை எல்லாம் வழுவின்றிச் செய்தான் என்றும் இவர் அவனைப் பாடியிருக்கும் பகுதிகள் அறியற் பாலன. இவர் இயற்றிய வேறு செய்யுள் புறநா. 239.

**பொதுக் கயத்துக் கீரந்தையார்** (337) :—கீரந்தையார் என்ற புலவர் சிலர் உண்டு. பொதுக்கயம் என்பது ஓர் ஊர். அவ்வூரினர் இவர். பருவம் வாய்த்த மகளிர்க்குரிய இயல்புகளை இவர் பாடல் தெரிவிக்கின்றது.

**பொன்மணியார்** (391) :—கார்காலத்தில் மயில்கள் கூவுவது தலைவிக்கு வருத்தத்தைத் தரும் என்று இவர் குறித்துள்ளார். இவர் ஒரு பெண்பாற் புலவர்.

**பொன்னுகனர்** (114) :—தலைவியைத் தலைவனேடு கூட்டவேண்டி அவளின் நீங்கித் தலைவனுக்கு ' இன்னுழி எதிர்ப்படுதி ' என்று தோழி கூறுவதாக உள்ள ஒரு செய்யுள் இவர் செய்தது. தலைவன் தலைவியிடம் விரைந்து செல்ல வேண்டும் என்பதைக் குறிக்க, " செலவியங் கொண்மோ வல்கலும், ஆர லருந்த வயிற்ற, நாரை மிதிக்கு மென்மகனுதலே " என்று அமைத்திருப்பது நயம்பட உள்ளது.

**மடல் பாடிய மாதங்கீரனர்** (182) :—மடலேற்றத்தைப் பற்றிய செய்தியைத் தம் செய்யுளிற் சொல்லுதலின் மடல் பாடிய என்னும் அடைமொழி இவரது பெயரின் முன் வைக்கப்பட்டுள்ளது. " தெருவில் மடலேறி வருவதே அவள்பால் நாம்

விடற்கமைந்த தூது" என்பது தலைவன் கூற்று. நற். 377-ஆம் செய்யுளும் இவர் பாடியதே. தலைவன் மடலேறுவே னென்று தன் நெஞ்சுக்குக் கூறுவதாகவே அச்செய்யுளும் அமைந்துள்ளது.

**மதுரைக் கடையத்தார் மகன் வெண்ணாகனார்** (223) :—தலைவி யும் தோழியும் பெரிய ஊரின்கண் நிகழ்ந்த விழாவுக்குச் சென்று தலைவனை எதிர்ப்பட்டு அளவளாவிய நிகழ்ச்சியைத் தலைவி நினைவுறுத்தியதாக இவர் செய்யுள் அமைந்துள்ளது.

**மதுரைக் கண்டரதத்தன்** (317) :—பனிக்காலத்தில் வாடைக்கு அழிந்த மேகம் தென்றிசை நோக்கிச் செல்லும் இயற்கையை இவர் அறிந்து கூறியுள்ளார்.

**மதுரைக் கண்ணனார்** (107) :—பொருள் முற்றி வந்த தலைமகனை யுடைய கிழத்தி காமமிக்க கழிபடர் கிளவியால், "எம்மைத் துயிலினின்றும் எழுப்பிய சேவலே, நீ இறந்துபடுவாயாக" என்று கூறுவதாக இவர் பாடியுள்ள செய்யுள் நயம் வாய்ந்த தொன்றும்.

**மதுரைக் கதக்கண்ணனார்** (88) :—கோபமிக்க கண்களையுடை யவர் என்பது கதக்கண்ணனார் என்பதன் பொருள்; "செல்வப் போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சின வாழி" (யா. கா. மேற்) என்ற அடியை நோக்குக. "அரிய வழியை அஞ்சாது தலைவன் நள்ளிரவில் வருதலும் வரு வான்; அவன் அங்ஙனம் வருதலினால் உண்டாகும் பழிக்கு நாம் நாணேம்" என்று தோழி கூறுவதாக இவர் பாடி யுள்ளார்.

**மதுரைக்காஞ்சிப் புலவர், மாங்குடி கிழார், மாங்குடி மருதனார்** (164, 173, 302) :—இந்த மூன்று பெயர்களும் ஒருவரையே குறிப்பனபோலும். தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மீது மதுரைக் காஞ்சி என்னும் நூலைப் பாடிய காரணமாக மாங்குடி மருதனார் என்பார் இப்பெயர் பெற்றார். பெயர் கூறாது இங்ஙனம் கூறுவது சிறப்புப்பற்றி என்க. அகநா. 89-ஆம் செய்யுள் அடியிலும் இவர் பெயர் இங்ஙனமே காணப்படுகின்றது. மாங்குடி கிழார் என்னும் நல்லிசைப் புலவரொருவர் இயற்றிய செய்யுட்கள் கருத் திலும் சொல்லமைதியிலும் இவருடையனவற்றை ஒத்திருப் பதால் அவரும் இவரும் ஒருவரெனவே கருதப்படுகின்றார். கிழாரென்னும் மரபுப் பெயரால் இவர் வேளாண் மரபின ரென்பது பெறப்படும். பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு

இவர்பால் இருந்த நன்மதிப்பு, "ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி, மாங்குடி மருதன் றலைவ னாக, உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற், புலவர் பாடாது வரைகவென் னில வரை" (புறநா. 72) என்று அவன் கூறிய வஞ்சினத்தால் விளங்கும். வாட்டாற்று எழினியாதன் என்பானை இவர் பாடியுள்ளார். இவர் பாடியனவாகவுள்ள வேறு செய்யுட்கள் 11 : மதுரைக். 1 ; நற். 2 ; அகநா. 1 ; புறநா. 6 ; திருவள்ளுவ. 1. இவற்றுள் நற்றிணை, 123-ஆம் செய்யுள் காஞ்சிப் புலவன் என்னும் பெயரோடும், குறுந்தொகை, 173-ஆம் செய்யுளும், அகநா. 89-ஆம் செய்யுள் மதுரைக் காஞ்சிப் புலவன் என்னும் பெயரோடும், குறுந்தொகை, 302-ஆம் செய்யுளும், புறநா. 24, 26, 313, 335, 372, 396-ஆம் செய்யுட்களும் மாங்குடி கிழார் என்ற பெயரோடும் வழங்குகின்றன. இவர் பாடிய அகத்திணைச் செய்யுட்களில் இல்லறம் நடத்தும் மகளொருத்தி விருந்தினரை உண்பிக்கும் பொருட்டு உணவு சமைக்கும் இயல்பும், மடன்மாவின் இலக்கணங்களும், வேடர்கள் தாம் கொள்ளையிட்டுப் பெற்ற பொருள்களைப் பாறையின்மேல் வைத்துப் பங்கிட்டுக் கொள்ளும் செயலும் நயம்படக் கூறப்பெற்றுள்ளன.

**மதுரைக் கொல்லன் புல்லன்** (373) :—கொல்லர் மரபிற் பல புலவர்கள் மதுரையில் இருந்தனர். "நிலம் புடை பெயரினும் நீர் தீப்பிறழினும், இலங்குதிரைப் பெருங் கடற் கெல்லை தோன்றினும் மலை நாடனொடு அமைந்த தொடர்பு கெடுதல் எவ்வாறு உடையதாகும்" என்று தோழி கூற்றில் கற்புடைய மகளது உள்ளத் தன்மையை இவர் விளக்கியுள்ளார். புல்லர் : இது புலவரென்பதன் திரிபாக இருக்கலாமென்று சிலர் கருதுகின்றனர்.

**மதுரைச் சீத்தலைச் சாத்தனூர்** (154) :—இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். இவரது இயற் பெயர் சாத்தனாரென்பது ; வணிக மரபினர். இவர் பத்தினிக் கடவுளாகிய கண்ணகியின் வரலாற்றையும் அவள் மேம்பாட்டையும் சேரன் செங்குட்டுவனுக்கு அறிவுறுத்தி அவனைக்கொண்டு அவளுக்கு ஒரு கோயில் கட்டுவித்து நித்திய பூசை முதலியன நடக்கும்படி செய்தனர். கண்ணகியின் வரலாற்றை அவனுடன் கேட்டவரும் அவன் சகோதரரும் துறவு பூண்டவருமாகிய இளங்கோவடிகள் அவளுடைய

சரிதத்தைப் பொருட்டொடர் நிலைச்செய்யுளாகச் செய்தற்கு வேட்கையடையும் வண்ணம் செய்தவர் இவரே. அதுவே சிலப்பதிகாரம். அதைக் கேட்டவரும் இவரே. மணிமேகலையின் ஆசிரியர் இவர். குறுந்தொகைச் செய்யுளையன்றி எட்டுத்தொகையில் இவர் செய்தனவாக உள்ள செய்யுட்கள்—9 (நற். 3; அகநா. 5; புறநா. 1). திருவள்ளுவமாலையிலும் இவர் செய்யுள் ஒன்று உண்டு. மருத்துவன் தாமோதரனாரும் இவரும் நெருங்கிய நட்பினர். சேரன் செங்குட்டுவன்பாலும் இளங்கோவடிகள்பாலும் இவர் மிக்க அன்புடையவர். காஞ்சி, வஞ்சி, காவிரிப்பூம்பட்டினம் இவற்றைப்பற்றி இவர் விரிவாகக் கூறியுள்ளார்.

**மதுரை நல்வெள்ளியார்** (365):—இவர் பெண்பாற் புலவர். வெள்ளியார் என்னும் சுக்கிரனுக்குரிய பெயர் இவருக்காயிற்றுப்போலும். இவர் அருவியின் ஒலிக்கு முரசின் ஒலியை உவமை கூறியுள்ளார் (365). "தலைவன் புரவலனைப் போலத் தோன்றி இரவலனைப் போலப் பணிமொழிகளைப் பயிற்றினான்" என்று தோழியின் கூற்றில் இவர் அமைத்த பாடலொன்று அகநானூற்றில் (32) காணப்படுகிறது.

**மதுரைப் பெருங் கொல்லனார்** (141):—இவருக்கு இப்பெயர் தொழிலால் அமைந்தது. இரவுக்குறி நிகழ்ந்த பின்னரும் தலைவற்குப் பகற்குறி நிகழுமென்பது இவர் வாக்கால் தெரிகிறது. பழைய கருத்து இரவுக்குறியையே யன்றிப் பகற்குறியையும் தலைமகள் மறுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது.

**மதுரை மருதங்கிழார் மகன் இளம்போத்தனார்** (332):—மருதங்கிழாரின் மக்கள் இளம் போத்தனார், பெருங் கண்ணனார், சோகுத்தனார் என்பவர்களின் பாடல்கள் தொகை நூல்களில் வந்துள்ளன. அவர்களுள் இளம் போத்தன் என்பவர் மூவரில் இளையவர் போலும். குறுந்தொகையில் மட்டும் இவர் பாடல் உள்ளது. வாடைக் காலத்தே சில் பெயல் இருக்குமென்றும் அக்காலத்தின் கடைநாளில் காம நோய் நீந்துதற் கரிதென்றும் இவர் புலப்படுத்தி யுள்ளார்.

**மதுரை மருதனிளநாகனார்** (77, 160, 279, 367):—மருதக்கலியைப் பாடிய மருதனிள நாகனார் வேறு; இவர் வேறு. ஒரு பாண்டியனுடைய வெற்றியை இவர் குறிப்பிடுகிறார்: நற். 39; அகநா. 312. இவராற் கூறப்படும் உபகாரிகள் பாட்டன், கோசர், வாணன், மாவண் கழுவுள் (அகநா. 90, 220,

269, 365) என்பவராவர். பரங்குன்றம், செல்லூர், ஊணூர், முனைப் பாக்கம், காமூர், (அகநா. 59, 90, 220, 245, 365) முதலியவை இவராற் குறிக்கப்படுகின்றன. "ஏதிலாளன் கவலை கவற்ற ஒரு முலையறுத்த" ஒரு பெண்ணின் செய்தி (நற். 216) இவராற் கூறப்படுகிறது. தொழுநையாற்றங் கரையில் மாயவன் கோவியர் புடைவைகளை ஒளித்து வைத் தமையையும் (அகநா. 59) பரசுராமர் யாகம் செய்தமையை யும் (அகநா. 220) இவர் கூறியுள்ளார். உண்மைக்குச் சூரியனை உவமங்கூறி, "முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி, ஏமுற விளங்கிய சுடரினும், வாய்மை சான்ற நின் சொல்" (நற். 283) என்கிறார். "அந்துவன் பாடிய சந்து கெழு நெடுவரை" என்று நல்லந்துவனார் என்ற புலவர் பரிபாடற் செய்யுளியற்றியதைச் சிறப்பித்துள்ளார்; அகநா. 59. பரத்தைமையை விரும்பிய ஒரு தலைமகனைப் பல மலர்களை நாடிச் செல்லும் வண்டிற்கு உவமையாக்கி, "நெடுநீர்ப் பொய்கை நடுநா ளெய்தித், தண்கமழ் புதுமல ரூதும், வண்டெனா மொழிப மகனென் றோரே" (நற். 290) என்கிறார். கரந்தை வீரர்களது "பெயரும் பீடும் எழுதி யதர்தொறும், பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" (அகநா. 131) இவராற் சிறப்பிக்கப்பட்டுள்ளது. நடுகல்லைப் பற்றிய வேறு செய்திகள் இவரியற்றிய அகநா. 297, 343, 365, 387-ஆம் செய்யுட்களிலும் காணப்படுகின்றன. ஒரு மனைவிக் குச் சிறப்பு அவளது சிறந்த கற்பினாலும் நற் புதல்வரைப் பெறுதலினாலுமே என்பது, "கடவுட் கற்பொடு குடிவிளக் காகிய, புதல்வர்ப் பயந்த புகழ்மிகு சிறப்பின், நன்ன ராட்டி" (அகநா. 184) என்று இவர் கூறியிருப்பதனாற் றெரிகிறது. கொங்குநாட்டில் மக்கள் இடையில் மணி களைக் கட்டிக்கொண்டு தெருக்களில் ஆடும் உள்ளிவிழா என்பதொன்று (அகநா. 368) இவராற் குறிக்கப்படுகிறது. இவருடைய பாடல்கள் பொருள் நயம் வாய்ந்து விளங்கு கின்றன. இறையனா ரகப்பொருளுக்கு இவரும் உரை செய்தனரென்பது அந்நூல் வரலாற்றாற் றெரிகிறது. நிலங் களைப் பற்றிய கற்பனைகளும், உள்ளுறைகளும், வெளிப் படையவுமங்களும், படிப்போர் மனத்தைக் கவர்வன. நிலங்களின் இயல்புகளை நன்கறிந்து பாடியவர். இவர் பாடிய வேறு செய்யுட்கள்: 33 (நற். 10; அகநா. 21; புறநா. 2)

**மதுரை யளக்கர் ஞாழலார் மகனர் மள்ளனர்** (188, 215) :— அளக்கர் ஞாழல் என்பது ஓரூர். மள்ளர் என்பது வீரரைக் குறிக்கும் சொல். பாண்டிய அரசரால் முதலில் இவர் பாதுகாக்கப் பெற்றவர். சுக்கிரன் வானத்தில் தென்பாற் காணப்படின் மழை குறையுமென்று இவர் அறிந்திருந்தனர் (புறநா, 388 : 1-2, 15-6). இவராற் பாடப்பட்டோன் சிறுகுடி கிழான் பண்ணன் என்பவன். இவர் சேனைத் தலைவர் என்பதற்கியையத் தம் பாடல்கள் சிலவற்றில் போர்க் களத்திற் பெறும் வெற்றியைச் செல்வம் என்று குறித்திருக் கிருர் (அகநா. 144, 174); வினை முடித்து மீளும் தலைமகன் பாகனெடு கூறும் கூற்றே இவர் கவிகளில் மிகுதியாகக் காணப்படுகிறது. புலியின் உபத்திரவத்திலிருந்து பிடியைக் களிறு காப்பது இவராற் கூறப்பட்டுள்ளது (215). இவர் பாடிய வேறு பாடல்கள் 10 (நற். 2; அகநா, 7; புறநா, 1).

**மதுரையறுவை வாணிகன் இளவேட்டனர்** (185) :—இவர் ஆடை விற்கும் வணிகர்; அறுவை - ஆடை. கீழ்காற்ருல் வீழ்த்தப்பட்ட காந்தள்மலர் பாறையின் மேல் கவிந்து கிடப்பது பாம்பு படம் ஒடுங்கிக் கிடப்பது போலும் (185) என்றும் செவிலியர் பாராட்டப் பொலஞ் செய் கிண்கிணி நலம் பெறுசேவடி மணல்மலி முற்றத்து நிலம் வடுக் கொளாமல் விளையாடு ஆயத்துச் சிருரைத் தலைவி காணுந் தோறும் தன்னை நினைந்து வருந்துவள் என்று வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுவதாக (அகநா, 254) இவர் பாடியுள்ளார். மேலும் தலைவன் தன் மின்னெளிர் எஃகமே செல்நெறி விளக்க நள்ளிரவில் வருவான் என்றும் (அகநா, 272) தினைப்பயிர் கரும்புபோலக் கவினித் தோன்றும் (அகநா. 302) என்றும் பாராட்டியுள்ளார். வேட்டனர் என்ற பெயர்க் காரணம் புலப்படவில்லை. இவர் செய்தன வாக நற்றிணையில் 1-ம், அகநானூற்றில் 6-ம், புறநானூற் றில் ஒன்றும், திருவள்ளுவ மாலையில் ஒன்றுமாக 9 செய்யுட் கள் காணப்படுகின்றன.

**மதுரை யாசிரியர் கோடங் கொற்றனர்** (144) :—ஆசிரியர் என் றதனல் இவர் கணக்காயர் போலும். மகட் போக்கிய செவி லித்தாயின் கூற்ருக இவர் பாடிய செய்யுள் நயமுள்ளதாகும்.

**மதுரை யீழத்துப் பூதன்றேவனர்** (189, 360) :—ஈழ நாட்டி லிருந்து வந்து மதுரையில் தங்கியவர் இவர். பூதன் என்பது இவருடைய தந்தையின் பெயர். தந்தத்திறை செய்த

தேரின் நேமி போகும்போது மண்ணிற் புதைந்த பகுதி போக எஞ்சிய பகுதியே வெளியில் தெரியுமாதலால் அப் பகுதிக்குப் பிறையையும், பயிரைத் துமிக்கும் நேமிக்கு விண்வீழ் கொள்ளியையும் (189) உவமை கூறியுள்ளார். தூக்கணாங் குருவிக் கூடுகள் தொங்கும் மூங்கில்களை வாடைக்காற்று அலைத்தலை (நற். 366) யும் காட்டுப் பன்றி தினையை உண்பதற்குப் பருவாய்ப் பல்லியின் பாடோர்த்துக் குறுகுதலையும் (அகநா. 88) இவர் வாக்கில் காணலாகும். சுரத்தில் 'பெருங்கை எண்கினம் ஈசலைத் தேடும் புற்றுக் களையுடைய சுவர்களோடு கூடிய புதல்கள் இவர்ந்த அழிந்து பட்ட பொதியிலில் கடவுள் நீங்கிய வலிய தூணினிடம் சேவற் புரு உடனுறை பழமையிற் றுறத்தல் செல்லாது பெடையுடன் வசிக்கும்' என்று (அகநா. 307) இவர் கூறுவதும் பிறவும் இவருடைய கவிநயம் ஆராய்ச்சி முதலிய வற்றைப் புலப்படுத்துகின்றன. இவர் பாடிய வேறு செய்யுட்கள் 4 (நற். 1; அகநா, 3)

**மதுரை யெழுத்தாளன் சேந்தம் பூதனுர்** (90, 226) :—சேந்தன் என்பவர் இவருடைய தந்தையார். அரசரிடும் கட்டளைகளை எழுதும் தொழிலையுடையவர் இவர். அகநா, 207-இல் மகட் போக்கிய தாயின் கூற்றாக இவர் கூறும் செய்திகள் சிறந்த நயமுடையனவாக அமைந்துள்ளன. குறுந். 90-இல் இவர் காட்டும் உள்ளுறையுவமை இனிமை பயப்பதொன்றும். இம்மூன்று பாடல்களே இவர் செய்தவை.

**மதுரை வேளா தத்தர்** (315) :—இவருடைய இயற்பெயர் தத்தன் என்பது. மதியத்தின் உதயம் கடலினிடத்தே நீளத் தோன்றுமாறு போல் கரிய மலையினிடத்தே அருவி தோன்றுமென்றும் தலைவன் சூரியனுக்கு ஒப்பாக அச் சூரியனுடன் திரிதரு நெருஞ்சி மலரைப் போன்றவள் தலைவியென்றும் நான்கு அடிகளில் சுருங்கக் கூறி விளங்க வைத்த இவர் புலமைத்திறன் பாராட்டற் பாலது.

**மள்ளனுர்** (72) :—சில அடைமொழிகளைப் பெற்றுள்ள மள்ளனுர் என்னும் இருவர் குறுந்தொகைச் செய்யுட்களை இயற்றிய வராக உளர். இவர் அவர்களினும் வேருக இருக்கலா மென்று தோற்றுகிறது. தலைவியின் பூவொத் தலமருங் கண் ஏவொத்து நோய் செய்தனவென்று தலைவன் பாங்கற் குக் கூறியதாக இவர் செய்த இவ்வொரு பாடலே இப் பொழுது கிடைத்துளது.

**மாடலூர் கிழார்** (150) :—இவர் வேளாண் மரபினர். இவர் ஊர் மாடலூர். மரத்தின் உச்சியிற் பரணின் மீது குறவர் இரவில் வாசனையுள்ள மரங்களை எரித்து விளக்கஞ்செய்யும் வழக்கம் இவராற் கூறப்பட்டுள்ளது.

**மாதிரத்தர்** (113) :—இப்பெயர் மாதீர்த்தன் என்றும் மாதீரத்தன் என்றும் சில பிரதிகளிற் காணப்படுகிறது. பெண்கள் கூந்தலின் எண்ணெயைப் போக்கிக் கொள்ள மண்ணை அப்பித் தேய்த்துக் குளிக்கும் வழக்கம் இவராற் கூறப்பட்டிருக்கிறது.

**மாமலாடனார்** (46) :—இப்பெயர் மாமிலாடன் என்றும் பிரதிகளிற் காணப்படுகிறது. மலாடு என்பது கொடுந்தமிழ் நாடுகள் பன்னிரண்டில் ஒன்று. அதனைச் சேர்ந்தவர் இவர். வாடிய ஆம்பல் மலருக்குக் கூம்பிய சிறகுகளையுடைய மனையுறை குருவியை இவர் உவமை கூறியிருக்கிறார்.

**மாமூலனார்** (11) :—இவர் அந்தணர்; இவரை யோகி என்றும் கொள்ளுதல் பொருந்தும். இது தொல். பொருள். 75-ஆம் சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர், "யோகிகளாய் உபாயங்களால் முக்காலமு முணர்ந்த மாமூலர் முதலியோர் அறிவன் றேயத்து அனைநிலை வகையோராவர்" என்று பார்ப்பன வாகையை விளக்குவதனால் விளங்குகிறது. மாமரத்தடியில் இருக்கும் ஏகாம்பரநாதன் பெயரே மாமூலர் என்று வழங்கியது போலும். இவர், "பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர், சீர்மிகு பாடலி" என்று நந்த மன்னரையும் (அகநா. 255), மோரியரையும் (அகநா. 251, 281) பாராட்டியிருப்பதனால் அவர்கள் காலத்தவராகக் கருதப் பெறுகிறார். அவர்கள் காலம் கி. மு. 260 ஆண்டுகளுக்கு முன் என்பர். பாலைத்திணையையே இவர் மிகுதியாகச் சிறப்பித்துப் பாடியுள்ளார். அங்கங்கே இவர் உபகாரிகளாகிய புல்லியையும் அவனது வேங்கட மலையையும் (அகநா. 61, 265, 295, 311, 359, 393) நெடு வேளாவியையும் (அகநா. 1, 61), நன்னனையும் அவன் ஏழிற் குன்றத்தையும் (அகநா. 15, 349), நன்னன் வேண்மான் என்பவனுடைய வியலூரையும் (அகநா. 97), மற்றும் வடுகத் தலைவராகிய கட்டி, எருமை என்பவர்களையும் அஞ்சி கண்ணனெழினி, பாணன் என்ற வட நாட்டுத் தலைவன் முதலியவர்களையும் தம் பாடல்களிற் குறிப்பிட்டிருக்கிறார். இவர்

பாடல்களிலிருந்து தெரியும் சரித்திரச் செய்திகள் பல: கரிகால் வளவனெடு வெண்ணிப் பறந்தலேயிற்பொருது தோற்றுப் புறப்புண் நாணி வடக்கிருந்த சேரலாதனெடு சில சான்ருேரும் வடக்கிருந்து மாண்டனர் என்பதும் (அகநா. 55) சேரலாதன் கடலில் நாவாயைச் செலுத்தி ஓரரசனுடைய கடம்பை அறுத்து அதனைக் கொண்டு செய் வித்த முரசினெடு இமயங்காறும் சென்று அம்மலேயின்மீது விற்பொறித்து வந்து பகைவர் தந்த திறை அனைத்தையும் தன் வாயில் முன் குவித்துப் பிறர் முகந்துபோகச் செய் தனன் (அகநா. 127) என்பதும், மத்தி என்பவன் எழினி யின்மேற் படையெடுத்துச் சென்று அவனை வென்று அவன் தன் பற்களைக் கொணர்ந்து தன் வாயிற் கதவில் அழுத் திஞன் (அகநா. 211) என்பதும், உதியஞ்சேரல் (பாரதப் படை வீரருக்குப்) பெருஞ்சோற்றை வழங்கியபோது கூளிச்சுற்றம் எஞ்சிய சோற்றை உண்ண அங்கு வந்து குழுமியிருந்தன (அகநா. 233) என்பதும், எவ்வி என்ற உபகாரி செருவில் இறந்துபட வருத்தம் பொருத பாணர் அவ்விடத்தே தம் யாழை முறித்துப் போட்டு அன்று காறும் அவ்வியாழ் தமக்கு வயிற்றுப் பிழைப்புக்குக் காரண மாக இருந்தமையின் அதனைத் தொழுது அவலித்தார்கள் (அகநா. 115) என்பதும் இவர் காட்டும் கதைகளில் ஒரு சிலவாம். இவர் கவிகளில் இங்ஙனம் வரலாறுகளே பெரிதும் காணப்படுகின்றன. இவர் இயற்றியனவாக இப் பொழுது கிடைத்துள்ள பாடல்கள்: 30 (நற், 2; குறுந். 1; அகம், 26; திருவள்ளுவ மாலே, 1). இவர் இலக்கண நூல் ஒன்று செய்துள்ளதாக இலக்கண விளக்கம் முதலியவற்ருல் தெரியவருகிறது.

**மாயெண்டஞர் (235)**:—இவர் பாம்பின் உரியை அருவிக்கு உவமை கூறுகிருர். தலேவியைப் பாதுகாக்குமாறு தலேவன் வாடையை வேண்டுவதாக இவர் செய்யுள் அமைந் துள்ளது.

**மாலே மாறஞர் (245)**:—வாள் போன்ற வாயையுடைய மடல் கள் செறிந்த தாழை வேல்நாட்டும் வேலியைப் போலப் பயன்தரும் கடற்கரை என்று இவர் கூறுவதிலிருந்து வேல் களே வேலியாக நடும் வழக்கம் உண்டென்று தெரிகிறது. மாறன் என்ற பெயர் இவர் பாண்டிய மன்னஞகை இருக்க லாமோ என்று கருத இடந்தருகிறது.

**மாவளத்தனார்** (348) :— இவர் தலைவியின் வாட்டத்துக்கு யானையின் கொம்பினால் முறிந்து கிடக்கும் முல்லைக் கொடியை உவமை கூறியுள்ளார். சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தன் என்ற பெயருடைய ஒருவன் புறநா. 43-ஆம் செய்யுளிற் கூறப்படுகிறான்.

**மிளைக்கந்தனார்** (196) :—மிளை என்பது ஓர் ஊர். மிளைப் பெருங் கந்தனார் என்ற பெரிய புலவர் ஒருவர் பாடிய கவிகள் இத்தொகை நூலில் வந்துள்ளன. அவர் வேறு, இவர் வேறு. "ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது வானோ ரமுதம் புரையுமாலெனக்கு" என்று தலைவன் தலைவியைப் பாராட்டுவான் என்ற இலக்கணத்துக்கு இவர் பாடல் உதாரணமாக விளங்குகின்றது. பாரிவள்ளலின் பறம்பு நாட்டிலுள்ள சுனைநீரின் இனிமை இவரால் புகழ்ப்பட்டுள்ளது. அதனால் அவ்வுபகாரியால் ஆதரிக்கப் பெற்றோருள் இவரும் ஒருவரென்று கொள்ளக் கூடும். கந்தனாரென்பது இவருக்கு இடப்பட்ட தெய்வப் பெயர்.

**மிளை கிழான் நல்வேட்டனார்** (341) :—இவர் வேளாண் மரபினர். நல் வேட்டனார் என்று வேறு அடையின்றியும் இவர் பெயர் காணப்படுகின்றது. "பெரியோர் கண்ணிய ஆண்மை கடவதன்று" (341), "நெடிய மொழிதலும் கடிய வூர்தலும், செல்வ மன்றுதன் செய்வினைப் பயனே, சான்றோர் செல்வ மென்பது சேர்ந்தோர், புன்கண் அஞ்சும் பண்பின், மென்கட் செல்வம் செல்வமென் பதுவே" (நற். 210) என்பன இவர் கூறும் நீதிகளாகும். கான்யாற்றுப் புது வெள்ளத்தில் தலைவி திளைத்தல் (நற். 53) இவரால் காட்டப்படுகிறது. மதியுடம்பாட்டின்கண் தலைவன் தோழியைப் பின்பற்றி ஒழுகுவதற்குப் போரிற்பட்ட வீரர் உயிர் போமளவும் அருகிருந்து பேய் வழிபாடு செய்தலை (பேய்க்காஞ்சியை) உவமை கூறியுள்ளார். (நற். 349). நற்றிணையில் 4 செய்யுட்கள் இவர் பாடியவை.

**மிளைப் பெருங் கந்தனார்** (136, 204, 234) :—காமத்தின் இயல்பை இவர் வருணிக்கும் முறை அழகாக அமைந்துள்ளது (136, 204). "செவ்வானம் படர்ந்து ஒளி மழுங்கிய பொழுதில் முல்லை மலர்கின்ற காலத்தையே மாலைக்காலம் என்பர்; துணைபிரிந்தவர்களுக்கு விடியலும் பகற்காலமும் கூட மாலையாகும்" என்று தலைவி கூற்றில் (234) இவர் அமைத்திருக்கும் செய்யுள் அழகமைந்ததொன்றும்.

**மிளை வேள் தித்தனுர்** (284) :—இவர் உழுவித்துண்ணும் வேளாளர் மரபைச் சேர்ந்தவர். பாறையின் மீது செங் காந்தள் படர்ந்து மலர்ந்திருப்பது போரில் புண்பெற்ற யானையின் முகத்தைப் போன்றதாக இவர் கூறியுள்ளார்.

**மீனெறிதூண்டிலார்** (54) :—இவர் யானை இழுத்துவிட்ட மூங்கி லுக்கு, மீன் பிடிப்பவர் மேலே இழுத்த தூண்டிலை உவமை கூறியதனுல் இப்பெயர் பெற்ருர். இவரது இயற்பெயர் தெரியவில்லை.

**மோசி கீரனுர்** (59, 84) :—மோசி என்பது ஓர் ஊர். மோசி கொற்றனுர் இவ்வூரினரே. படுமரத்து மோசி கீரனுர் என்னும் புலவர் ஒருவர் இத்தொகை நூலிற் பாடியுள்ளார். அவரும் இவரும் ஒருவரோ வேருே தெரியவில்லை. ஒருகால் இவர் தெய்வத்தன்மையுள்ள முரசு கட்டிலில் அறியாது துயின்று சேரமான் தகடுரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையாற் கவரி வீசப்பெற்ற பெருமை வாய்ந்தவர். இவர் அம்மன்னவனையும் கொண்கானங் கிழான் என்பானையும் பாடியுள்ளார். "நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே, மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்" என்று அரசரின் இன்றியமையாமையை இவர் புலப்படுத்தியுள்ளார் (புறநா. 186). "தலைவன் நின்னைப் பிரியான்; பிரியின், வேற்று வேந்தன் தானையோடு மதிற்புறத்தே வந்திறுப்பப் புறத்தே வாராமல் அகமதிலிற்கிடந்த நன்னன் போல யான் ஆகுவன்" என்று தோழி தலைவிக்குக் குறை நயப்பிக்குங் கால் கூறுவது அழகாக உள்ளது (அகநா. 392). ஆய் அண்டிரனுடைய பொதியில், ஓர் உபகாரியின் அரலைக் குன்றம் இவைகளையும் இவர் பாராட்டியுள்ளார். (59, 84). குறுந்தொகையிலன்றி இவரியற்றியனவாக இப்போது தெரிந்துள்ள வேறு செய்யுட்கள் : 7 (நற். 1; அகநா. 1; புறநா 4; திருவள்ளுவமாலை, 1)

**மோசி கொற்றனுர்** (377) :—தலைவனது நல்லியல்பறிந்து ஆற்றி யிருக்கும் தலைவி தோழியைப் பார்த்து, "நீ ஆற்றலையே" என்று கூறுவதாக இவர் பாடிய செய்யுள் அமைந் துள்ளது.

**மோதாசனுர்** (229) :—மனம் ஒத்துச் செல்கின்ற தலைவன் தலைவியர்க்கு இணைமலர்ப்பிணையலை இவர் உவமை காட்டி யுள்ளார். சிறுவயதில் ஓரில்லிலிருந்து கலாம் விளைத்தாரைத் தலைவன் தலைவியாகச் செய்த விதியை இடைச் சுரத்துக்

கண்டோர் வியந்து பாராட்டியதாக இவர் செய்யுள் அமைந்துள்ளது.

**வடமவண்ணக்கன் தாமோதரனுர்** (85) :—இவர் பெயர் வடமன்ருமோதரனுர் என்றும் பிரதிகளிற் காணப்படுகின்றது. வண்ணக்கன் - நாணய பரிசோதகன், நோட்டக்காரன் ; இப்பொருள் நீலகேசி உரையிற் கண்டது. இவர் வடதிசையிலிருந்து வந்தவராக எண்ணப்படுகிருர். புறநானூற்றில் (172) பிட்டங் கொற்றனை இவர் பாடுங்கால், "பிட்டன் வேலும், அவன் மாறுகொள் மன்னரும் வாழ்க" என்று கூறுகிருர். பகைமன்னரை அங்கு வாழ்த்தியது இவன் வென்று திறை கொள்ளல் அவருளராயின் என்பதனுல். "தலைவன் பாணன் வாயில் யாரினும் இனியன் பேரன்பினன்" என்று தோழி தலைவனது அன்பின்மையைப் புலப்படுத்துவதாக இந்நூலுள் இவர் செய்யுள் அமைந்துள்ளது. இவர் இயற்றிய வேறு செய்யுள் புறநா. 172.

**வடமவண்ணக்கன் பேரி சாத்தனுர்** :—பேரி சாத்தனுர் என்ற புலவரும் இவரும் ஒருவரே என்று கொள்ளல் அமையும். பேரி சாத்தனுர் என்ற பெயரைப் பார்க்க.

**வருமுலை யாரித்தி** (176) :—இவர் பெண்பாலார். நெஞ்சத்தின் கலக்கத்துக்கு மழை நீரின் கலக்கத்தை இவர் உவமை கூறியுள்ளார். தலைவனுக்குத் தேனிருலை இவர் உவமை கூறியிருப்பது பாராட்டற்பாலது.

**வாடாப் பிரபந்தர்** (331) :—தலைவன் பொருள் தேடிச் செல்வதற்காகப் பிரிய எண்ணியதை நினைந்து வருந்திய தலைவியை நோக்கிய அவர் அங்ஙனம் செல்லாரென்று ஆற்றுவித்ததாக அமைந்துள்ளது இவர் செய்யுள்.

**வாயிலான் தேவனுர்** (103, 108) :—வாயில் ஒன்பது ஒரூர். வாயிலிளங் கண்ணனுரும் இவ்வூரினரே. இந்த இரண்டு செய்யுட்களும் பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குக் கூறும் கூற்ருக அமைந்துள்ளன.

**வாயிலிளங் கண்ணனுர்** (346) :—"தலைவன் காலையில் வந்து தலைவிக்குக் குவளைமாலையைத் தந்தும், பகலில் தினையில் படுகிளி ஒப்பியும், மாலைப் பொழுதில் தன்நெஞ்சில் ஒன்றைக் கருதி வருந்தி அக்கருத்தைச் சொல்லவும் எழுச்சி பெருமல் குறைவுற்ருன்" என்று தோழி கிழத்தியை இரவுக் குறி நயப்பக் கூறியதாக இவர் பாடல் அமைந்துள்ளது.

**விட்ட குதிரையார்** (74) :—யானையாற் பற்றி விடப்பட்ட மூங்கில் செருவிற் செலுத்தி விட்ட குதிரையைப் போல மேலே எழும்பும் என்று உவமையை அமைத்தமையின் இச் சிறப்புப் பெயரால் இவர் வழங்கப்பட்டார்.

**வில்லக விரலினார்** (370) :—பரத்தையும் தலைவனும் ஒன்றுபட்ட தற்கு வில்லைப் பிடித்த விரல்களை உவமையாக்கி, " வில்லக விரலிற் பொருந்தி " என்று பாடுதலின் இவர் இப்பெயர் பெற்றார்.

**விற்றூற்று மூதெயினனார்** (372) :—இப்பெயர் முத்தூற்று மூதெயினனார் என்றும் பிரதிகளிற் காணப்படுகின்றது. விற்றூறு அல்லது முத்தூறு என்பது ஓர் ஊரின் பெயர். விற்றூற்று வண்ணக்கன் தத்தன் என்ற ஒருவரது பாட்டு நற்றிணையிற் காணப்படுகின்றது. இவர் வேடர் மரபின ரென்பதும் முதுமையினாற் கௌரவம் பெற்றவரென்பதும் மூதெயினனார் என்ற தொடரால் தெரியவருகிறது. தமிழ ருடைய திருமண முறை இவரால் மிக அழகாக வருணிக்கப் பெற்றுள்ளது (அகநா. 136). திங்களை உரோகிணி சேர்ந்த நாள் எல்லாக்குற்றமும் நீங்கிய நன்னாளென்று இவர் கூறுவர். மண நாளன்று வாகையிலையையும் அறுகங் கிழங்கையும் நூலிற் சேர்த்துக் கட்டி அதனை மணமகளுக் குச் சூட்டும் வழக்கமும் அற்றையிரவிலேயே மணமகனையும் மகளையும் பள்ளியறைப் படுத்தலும் இவர் வாக்கால் தெரிய வருகின்றன. போர்த்தியுள்ள போர்வை கழித்ததும் வெளிப் படும் தலைவியின் தோற்றத்துக்கு இவர் உறை நீக்கிய வாளின் தோற்றத்தை உவமை கூறியிருப்பது பாராட்டத் தக்கது. இவர் இயற்றியனவாக அகநானூற்றில் மூன்று செய்யுட்கள் காணப்படுகின்றன.

**வெண்கொற்றனார்** (87) :—தன்னை வருத்தும் ஈயின் குரலோசை யைக் கேட்ட அளவிலேயே பசுவானது நடுங்க அதன் கழுத்திலுள்ள மணி ஒலிக்கும் என்று இவர் ஈயின்பால் பசுவுக்குள்ள அச்சத்தைப் புலப்படுத்தி அம்மணியோசை தலைவிக்குக் காமவேதனையை மிகுப்பதை இந்த ஒரு பாட்டிற் காட்டியுள்ளார்.

**வெண்பூதனார்** (83) :—பலாப்பழத்தின் சுவைக்கு இவர் தமது வீட்டின்கண் இருந்து தமது முயற்சியால் ஈட்டிய பொருளில் தம் கூற்றை உண்போர் பெறும் சுவையை உவமை காட்டி யுள்ளார். தலைவனை மணமகனாக ஏற்றுக் கொள்ள இயைந்த

செவிலியைத் தோழி, "அரும்பெற லமிழ்த மார்பத மாகப், பெரும்பெய ருலகம் பெறீஇயரோ" என்று வாழ்த்துவதாக இவர் செய்யுள் அமைந்துள்ளது.

**வெண்பூதியார்:** (97, 174, 219):—வெள்ளூர்கிழார் மகனார் வெண் பூதியார் என்பாரும் இவரும் ஒருவரே. பெயரளவில் பெண் பாலாக இருக்கலாமென்று தோற்றினும் வெள்ளூர் கிழார் மகனார் என்றிருப்பதால் ஆண்பாலென்றே கொள்ள வேண்டும். இவர் வேளாண் மரபினர்; சைவ சமயத்தார்; பூதி - விபூதி; திருநீறு. இவருடைய செய்யுட்கள் மூன்றும் தலைவியின் கூற்றாகவே அமைந்துள்ளன. "யான் ஈண்டை யேன், என் நலன் கானலிடத்தது, தலைவன் தன் ஊரினன், எம்மிருவருக்குமிடை நின்ற மறை அலராகி அம்பல மாயிற்று" (97) என்று தலைவி தன் வருத்தத்தைத் தெரி விக்கும் செய்யுள் சுருங்கச் சொல்லல் முதலிய பல அழகு களைத் தன் பாற் பெற்ற தொன்றாம். இஃது ஒரு வகையில் 219-ஆம் செய்யுளோடு ஒத்திருக்கின்றது. "தலைவன் பொருள் வேட்கையனாகித் தன்னைப் பிரிய நினைப்பானே யானால் இவ்வுலகில் செல்வமே உறுதிப் பொருளாகும், அருளோ தன்னை எவரும் ஏற்றுக் கொள்ளாததாகும்" என்று தலைவி கூறுவதாக இவர் அமைத்துள்ள பாட்டும் (174) அழகமைந்ததொன்றாம்.

**வெண்மணிப் பூதி** (299):—இவர் ஒரு பெண்பாற் புலவர். வெண்மணியென்ற ஓர் ஊர் அரியலூர்ப் பக்கத்தில் உள்ளது. இவர் அவ்வூரினர் போலும். "தலைவனைக் கண்ட கண்ணும் அவன் சொல்லைக் கேட்ட செவியும் வாளா விருக்கத் தோள்கள் மட்டும் அவன் பிரிந்தகாலைத் தன் மெலிவைப் புறத்தார் அறியும்படி நெகிழ்ந்தன" என்று தலைவி கூறுவ தாக இவர் செய்யுள் அமைந்துள்ளது.

**வெள்ளி வீதியார்** (26, 44, 58, 130, 146, 149, 169, 386):— இவர் பெண்பாலார். இவர் பாடிய பாடல்கள் பல தம் அனுபவங்களே யாகும் என்பதும், இங்ஙனமே தம் அனுபவங்களைக் கூறும் ஆதிமந்தியார் என்ற பெண் புலவரும் இவரும் ஒரு காலத்தவர் என்பதும் தொல். அகத். சூ 54-க்கு நச்சினார்க்கினியர் எழுதிய விசேட உரையால் தெரிகின்றன. "கன்று முண்ணாது கலத்தினும் படாது கவினே...இது (குறுந். 27) **வெள்ளி வீதியார்** பாட்டு; 'மள்ளர் குழீஇய விழவி னானும்......மகனே' (குறுந். 31);

இது காதலற் கெடுத்த ஆதிமந்தி பாட்டு. இவை தத்தம் பெயர் கூறிற் புறமாம் என்றஞ்சி வாளாது கூறினர். ஆதிமந்தி தன் பெயராலும் காதலனாகிய ஆட்டனத்தி பெயராலும் கூறிற் காஞ்சிப் பாற்படும் ; ' ஆதிமந்திபோல, ஏதஞ்சொல்லிப் பேது பெரிதுறலே ' (அகநா. 236) எனவும், ' வெள்ளி வீதியைப் போல நன்றும், செலவயர்ந் திசினால் யானே ' (அகநா. 147) எனவும் அகத்திணைக்கட் சார்த்து வகையான் வந்தன அன்றித் தலைமை வகையாக வந்தில என்பது" அது. வெள்ளி வீதியார் தம் கணவனைத்தேடி அலைந்தமை இவர் வாக்கானும், ஔவையார் "நெறிபடு கவலை நிரம்பா நீளிடை, வெள்ளிவீதியைப் போல நன்றுஞ், செலவயர்ந் திசினால் யானே" (அகநா, 147) என்று கூறி யிருப்பதனாலும் தெரியவரும். இவர் பாடிய "தூது விட்டுத் தலைவரைத் தேடித் தருவேன்" என்ற தோழி கூற்று, "நிலந் தொட்டுப் புகாஅர் வான மேறார், விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார், நாட்டி னாட்டி னூரினூரிற், குடி முறை குடிமுறை தேரிற், கெடுநரு முளரோ நங் காதலோரே" (130) என்று அழகுபட அமைந்துள்ளது. நச்சினார்க்கினியர் இச்செய்யுளை "செவிலி இடைச் சுரத்துச் சென்று தலைவி யையும் தலைவனையும் தேடத் துணிந்து கூறினது" என்பர் (தொல். அகத். சூ. 37). "காலே பரிதப்பினவே கண்ணே, நோக்கி நோக்கி வாளிழந்தனவே .........பிறரே" (குறுந். 44) என்பதும் செவிலியின் கூற்றே. இச்செய்யுள் மிகுந்த நயம் வாய்ந்தது. தன் காமநோய் பரவுதலைத் தலைவன் பாங்கனுக்குக் கழற்றெதிர்மறையில், "ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற், கையிலூமன் கண்ணிற் காக்கும், வெண்ணெ யுணங்கல் போலப், பரந்தன்றிந் நோய்" (58) என்று கூறும் பகுதியுள் அந்நோயைத் தடுக்கத் தன் செயலின்மை குறிக்கப்படும் முறை அழகிது. முன்காலத்தில் மணம்பேசப் பெரியோரை விடுத்தலும் தலையில் பாகையை அணிந்து மங்களகரமான இடங் களுக்குச் செல்ல வேண்டும் என்பதும் தமிழ் நாட்டின் மரபு. இம்மரபு 146-ஆம் செய்யுளில் இவராற் கூறப்படு கிறது. அன்னி என்பான் குறுக்கைப் பறந்தலையில் திதிய னுடைய காவல் மரமாகிய புன்னையைக் குறைத்த செய்தி இவராற் குறிக்கப்பட்டுள்ளது (அகநா. 45). நற்றிணையில்

மூன்றும் அகத்தில் இரண்டும் திருவள்ளுவ மாலையில் ஒன்றும் இவர் பாடிய வேறு செய்யுட்களாகும்.

**வேட்டக் கண்ணனுர்** (389) :—இவர் சாதியில் வேடர் என்று தெரிகிறது ; வேட்டம் - வேட்டை. இவர் தாம் வேடர் என்பதற்கியையத் தோழிகூற்றில் " தலைமகனுடைய குற்றேவல் மகன், " நெய்கனி குறும்பூழ் காயமாக, ஆர்பதம் பெறுக " என்று நெய்யிற் பொரித்த காடை இறைச்சியைக் கூறியுள்ளார். வேட்டக் கண்ணனுர் என்பது கண்ணப்ப நாயனுரை நினைவுறுத்துகின்றது.

**வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தனுர்** (362) :—வேம்பற்றூர் என்பது மதுரைக்கு வடகிழக்கில் இரண்டு காதத்தில் வையை நதிக்கு வடக்கே உள்ளது. பண்டைக்காலந் தொட்டுத் தமிழ் அறிஞர் வாழும் இடம் இது. இப்போது வேம்பத்தூர் என்று வழங்குகிறது. வேம்பற்றூர்க் குமரனுர் என்பவரின் பாடல்கள் அகத்திலும், புறத்திலும் உள்ளன. இவர் கூத்தாடுந் தொழிலையுடையவர். " வேல, நீ கொடுக்கும்பலியைச் சிலம்பன் ஒண்டாரகலமும் உண்ணு மோ " என்று தோழி கூற்றில் இவர் அமைத்துள்ள கருத்தைப் பிற்காலத்தவர் அங்ஙனமே எடுத்தாண்டனர் (தமிழ்நெறி. மேற். 104 ; பாண்டிக் கோவை ; கிளவித் தெளிவு)

---

*

பல்வே லிளைஞரின்" (குறிஞ்சிப். 129). கட்டி : "துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி", "போரடு தானைக் கட்டி" (அகநா. 44 : 8, 226 : 16)

7. மொழி பெயர் தேஎம்: ஐங். 321 : 4; அகநா. 67 : 12, 211 : 8. 5-7. வடுகர் முனையதாகிய நாடு: "கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர், நெடும்பெருங் குன்றம்" (நற். 212 : 5-6); "வேங்கடத் தும்பர்.........இகன் முனைத் தழீஇய வேறுடைப் பெருநிரை, நனைமுதிர் நறவி னுட்பலி கொடுக்கும், வானிணைப் புகவின் வடுகர் தேஎத்து", "புடையலங் கழற்காற் புல்லி குன்றத்து, நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத், தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர், பிழியார் மகிழர் கலிசிறந் தார்க்கும், மொழிபெயர் தேஎம்" (அகநா. 213 : 3-8, 295 : 13-7)

மு. "நாஞ்செலி னெவனோ தோழி......குன்றுவிலங் கியவினவர் சென்ற நாட்டே" (அகநா. 309 : 12-7) (11)

## தலைவி கூற்று

['தலைவி தலைவனது பிரிவை ஆற்றும் வன்மையிலளாயி னுள்' என்று கவலையுற்ற தோழி கேட்கும்படி, "தலைவர் சென்ற வழியின் கொடுமையை நினைந்தே யான் வருந்துகின்றேனென் பதை உணராமல் இவ்வூர், பிரிவை ஆற்றேனாயினேனென்று வேறொன்றைக் கூறுநின்றது; இஃது என்ன பேதைமை!" என்று தலைவி சொல்லியது.]

**12.** எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
உலைக்க லன்ன பாறை யேறிக்
கொடுவி லெயினர் பகழி மாய்க்கும்
கவலைத் தென்பவவர் சென்ற வாறே
அதுமற் றவலங் கொள்ளாது
நொதுமற் கழறுமிவ் வழுங்க லூரே.

எ - து. ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

ஓதலாந்தையார்.

(பி - ம்.) 2 'உலைக்கனலன்ன' 4 'கவலைத்தவர் தேர் சென்ற', 'கவலைத் தென்பவவர் தேர்' 6 'நொதுமலர்க்கழறும்', 'நொதுமற்கலுழும்'

(ப - ரை.) அவர் சென்ற ஆறு - தலைவர் போன வழி யானது, எறும்பி அளையின் - எறும்பின் வளைகளைப்போல, குறு பல் சுனைய - குறுமையையுடைய பலவாகிய சுனையை உடைய,

உலைகல் அன்ன - கொல்லனது உலைக்களத்துள்ள பட்டடைக் கல்லைப்போன்ற வெம்மையையுடைய, பாறை ஏறி - பாறையின் மேல் ஏறி, கொடு வில் எயினர் - வளைந்த வில்லையுடைய எயினச் சாதியினர், பகழி மாய்க்கும் - தம் அம்புகளைத் தீட்டுதற்கு இட மாகிய, கவலைத்து - கவர்த்த வழிகளை உடையது, என்ப - என்று கண்டோர் கூறுவர், இ அழுங்கல் ஊர் - இந்த ஆரவாரத்தை யுடைய ஊரானது, அது அவலம் கொள்ளாது - அவ்வழியின் கொடுமையைப்பற்றித் துயரத்தை உட்கொள்ளாமல், நொதுமல் கழறும் - அயற்றன்மையையுடைய சொற்களைக் கூறி இடித் துரைக்கும்.

(முடிபு) அவர் சென்ற ஆறு கவலைத்து என்ப; ஊர் அவலங் கொள்ளாது கழறும்.

(கருத்து) தலைவர் சென்ற வழி மிக்க கொடுமையை யுடையது; அதனைத் தோழி நினைந்திலள்.

(வி - ரை.) எறும்பி - எறும்பு; எறும்பை எறும்பியென வழங்கும் மரபு திருவெறும்பியூரென்னும் சிவதலத்தின் பெய ராலும் அறியப்படும்; "எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே" (தே. திருநா.) அளை - வளை; எறும்பின் வளையை இங்ஙனம் கூறும் வழக்கு, "நுண்பல் லெறும்பு கொண்டளைச் செறித்த, வித்தாவல்சி" (அகநா. 377 : 3-4) என்பதனாலும் பெறப்படும். சுனைகள் குறுமையும் பன்மையும் உடையன வென்பதை "மீன்க ணற்றதன் சுனையே" (புறநா. 109 : 10) என்பதற்கு, 'மீன்கணொன்றது சுனையினது பன்மையும்.........சிறுமையும்' என்றெழுதப்பட்டுள்ள விசேடவுரையும் வலியுறுத்தும். குறும்பல் சுனை - ஒன்றற்கொன்று அண்ணிதாய்ப் பலவாகிய சுனை யென் றலுமாம் (பட். 38, ந.) சுனைய பாறை, அன்னபாறையென இயைக்க. உலைக்கல்லை உவமை கூறியது வெம்மைக்கு; "ஞாயிறு காயும் வெவ்வறை" (குறுந். 58 : 3) என்பது பாறை யின் வெம்மையைப் புலப்படுத்தல் காண்க. கொடு வில் எயினர் - வழிப்போவாரைக் கொல்லுதற்குக் காரணமாகிய கொடுமையை யுடைய வில்லையுடைய எயினர் எனலுமாம்; 'கொடுவில் எயினர் - கொடிய வில்லையுடைய வேடர்' (பட். 266, ந.) மாய்த்தல் - தீட்டுதல்; "மாய்த்த போல" (அகநா. 5 : 12) என்பதன் உரையைப் பார்க்க. மற்று : அசை. நொதுமற்கழறு மென்றது, வழியின் கொடுமையை அறிந்து வருந்துதலை உணராமல், பிரிவினால் ஆற்றுதிருந்தாளென்று தோழி சொல் வதை; நொதுமல் - அயல். அழுங்கல் - தடை செய்தலு

மாம். ஊரென்றது தோழியை; தோழியை ஊரென்றல் மரபு; "யானெவன் செய்கோ பொய்க்குமிவ் வூரே" (ஐங். 154) என்பதன் உரையில், 'பொய்க்கு மிவ் வூரென்றது, தலைமகன் குணங் கூறுகின்ற தோழியை நோக்கியெனக் கொள்க' என்றுள்ள பகுதியினும், "இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே, ஏதில ரென்னுமிவ் வூர்" (குறள், 1129) என்பதன் விசேடவுரையில், 'தன் கருத்தறியாமைபற்றிப் புலந்து சொல்லுகின்றுளாகலின் தோழியை வேறுபடுத்து இவ்வூரென்றுள்' (பரிமேல்) என்றுள்ள பகுதியினும் இதனையறியலாம். வழியினது வெம்மையும் ஆறலைகள்வரால் வரும் அச்சமும் வழியினது மயக்கமும் அவலத்துக்கு ஏதுவாயின.

(மேற்.) 1-2. இயற்சீர்வெள்ளடி ஆசிரியம் தொடுக்குங்கால் பா ஒன்றுகத் தொடுக்கப்படும் (தொல் செய். 162, பேர்.); இயற்சீர் வெள்ளடி ஆசிரியத்தில் விரவிவரும் (தொல். செய். 112. இளம், 62, பேர், ந; இ. வி. 745)

மு. தலைவன் பிரிந்துழி வழியருமை பிறர் கூறக்கேட்டுத் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந.); தலைவி கொடுஞ்சொற் சொல்லியது (நம்பி. 170); இயற்சீர் வெள்ளடி ஆசிரியத்தில் விரவிவரும் யா. வி. 29; யா. கா. ஒழிபு. 4.)

(ஒப்பு.) 1. சுனையின் குறுமை: "மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன, இட்டுவாய்ச் சுனைய" (குறுந். 193 : : 1-2.)

1-2. சுனையை யுடைய பாறை: "பிடிதுஞ்சு வன்ன வறை மேல நுங்கின், தடிகண் புரையுங் குறுஞ்சுனை" (கலித். 108 : 40-41); "பாறை நெடுஞ்சுனை" (அகநா. 2 : 4)

3. கொடுவில் எயினர்: "மாரி வளம்பெரு வில்லே ருழவர், கூற்றுறழ் முன்பொடு கொடுவி லேந்தி" (சிலப். 11 : 210-11)

4. ஆறு கவலைத்து: "கவலை யாத்த வவல நீளிடை" (குறுந். 224 : 1)

6. அழுங்கலூர்: குறுந். 140 : 5, 289 : 8.

மு. "மண்டுந் திரைவையை சூழ்தஞ்சை வாணற்கு வன்புலியும்
செண்டுங் கொடுத்தகல் செம்பியர் போலன்பர் சென்றுழி யுள்
இண்டுங் கழையும் பயிலும்வெங் கானியல் கேட்டுமிந்நோய்
கண்டுங் கலங்கல்செல் லாதிந்த வூரெற் கழறனன்றே"
(தஞ்சை. 266.) (12)

## தலைவி கூற்று

[பாங்கியிற் கூட்டத்தின்பின் பிரிவாற்றுமல் வருந்திய தன் வேறுபாடுகளை உணர்ந்து கவன்ற தோழியை நோக்கி, "தலைவரது பிரிவினுல் எனது உள்ளம் நோய் கொண்டது; கண்களும்

அழகிழந்து பசலையை அடைந்தன" என்று தலைவி கூறி ஆற்றாமைக்குக் காரணத்தைப் புலப்படுத்தியது.]

**13.** மாசறக் கழீஇய யானை போலப்
பெரும்பெய லுழந்த விரும்பிணர்த் துறுகல்
பைத லொருதலைச் சேக்கு நாடன்
நோய்தந் தனனே தோழி
பசலை யார்ந்தன குவளையங் கண்ணே.

**எ - து.** தலைவன் தோழியிற் கூட்டங்கூடி (பி - ம். கூட்டி) ஆற்றும் வகையான் ஆற்றுவித்துப் பிரிய, வேறுபட்ட கிழத்தி தோழிக்கு உரைத்தது.

[தோழியிற் கூட்டம் - தோழியை முன்னிட்டுக்கொண்டு தலைவியைக் கூடியது. ஆற்றும் வகையான் ஆற்றுவித்தல்: பெருநயப்புரைத்தும், பிரியேனென்றும், பிரிந்து மீள்வேனென்றும், இடமணித்தென்றும் கூறி ஆற்றுவித்தல்.]

**கபிலர்.**

(பி - ம்.) 1 'கெழீஇய' 3 'லொருத்தலைச்', 'லொருதலை சேக்கு' 5 'யார்ந்தநங்குவளை', 'யான்றனங்குவளை'

(ப - ரை.) தோழி—, மாசு அற கழீஇய - மேலேயுள்ள புழுதி முற்ற நீங்கும்படி பாகனாற் கழுவப்பட்ட, யானை போல - யானையைப் போல, பெரு பெயல் உழந்த - பெரிய மழையை ஏற்றுத் தூய்மையுற்ற, இரு பிணர் துறுகல் - பெரிய சருச்சரையையுடைய துறு கல்லானது, பைதல் ஒரு தலை - பசுமையையுடைய ஓரிடத்தில், சேக்கும் நாடன் - தங்குகின்ற மலைநாட்டையுடைய தலைவன், நோய் தந்தனன் - காம நோயைத் தந்தான்; அதனால் குவளை அம் கண் - முன்பு குவளை மலரைப் போன்றிருந்த என்னுடைய அழகிய கண்கள், பசலை ஆர்ந்தன - இப்பொழுது பசலை நிறம் நிரம்பப் பெற்றன.

(முடிபு) தோழி, நாடன் நோய் தந்தனன்; அதனால் என் கண்கள் பசலையார்ந்தன.

(கருத்து) தலைவன் பிரிவினால் வேறுபாடுகள் உண்டாயின.

(வி - ரை.) மாசு என்றது புழுதியை; யானை தன் தலையிலும் உடம்பிலும் தானே புழுதியை வாரி வீசிக்கொள்ளும் இயல்பினதென்பது இங்கே அறிதற்குரியது; "நீருடிய களிறு" (பட். 49) தன்பாலுள்ள புழுதி முற்றும் நீங்கும்படி கழுவப்பட்ட யானையைப் போலத் துறுகல்லிலுள்ள பல மாசுகளும் அறக்

கழுவவேண்டுதலின் பெரும்பெயல் என்றாள்; இங்கே கூறப் பட்ட இவ்வுவமை இந்நூலின் 279-ஆம் செய்யுளில், "மழை கெழு மறந்த மாயிருந் துறுகல், துகள்சூழ் யானையிற் பொலியத் தோன்றும்" என்று எதிர்மறை முகத்தால் ஆளப் பட்டிருத்தல் காண்க. இருமை - கருமையுமாம். பிணர் - நால்வகை ஊறு களுள் ஒன்று; இதனை ஜர்ஜ்ஜரா வென்பர் வடமொழியாளர்; அது தமிழில் சருச்சரையென வழங்கும்; இக்காலத்தில் சுரசுரப் பென்பதும் அது. துறுகல் - உருண்டைக்கல்; பொற்றையென வழங்கும்; நெருங்கிய மலையென்பர் நச்சினார்க்கினியர். பைதல் - ஈரமுமாம். நாடன் - குறிஞ்சிநிலத்தலைவன்; குறுந். 3 : 4, வி - ரை. நோயென்றது பிரிவாற்றாமையால் மிக்க காம நோயை (கலித். 17 : 9, ந.) அஃது உடம்பின் மெலிவுக்குக் காரணமாவது (சிலப். 16 : 79, அரும்பத.) பிரிவாற்றாத மகளி ருக்குக் கண் பசத்தல் இயல்பு. குவளையங்கண் என்றது பசலை யார்வதற்கு முன் இருந்த நிலையைப் புலப்படுத்தியபடி; கழிந் ததற் கிரங்குதலால் தற்புகழ்ச்சியாகாது.

துறுகல் தன் இயல்பினை மறைக்கும் மாசு நீங்கப் பெற்ற நாடன் அவ்வியல்பிற்கு மாறாக என் கண்களின் இயல்பை மறைக்கும் பசலையை வளரச் செய்தனனென்பது குறிப்பு.

(மேற்.) மு. பாங்கி தலைவனை இயற்பழித்தது (தொல். களவு. 23, இளம், ந.)

(ஒப்பு.) 2. மழை துறுகல்லைக் கழுவுதல்: "வான்கண் கழீஇய வகலறை" (குறிஞ்சிப். 98)

1 - 2. துறுகல்லிற்கு யானை உவமை: குறுந். 279 : 5-6; "கூழை யிரும்பிடிக் கைகரந் தன்ன, கேழிருந் துறுகல்", "பொருத யானைப் புகர்முகங் கடுப்ப, மன்றத் துறுகன் மீமிசைப் பலவுடன், ஒண் செங் காந்த ளவிழு நாடன்" (குறுந். 111 : 4-5, 284 : 1-3); "யானை...... தாறிவர் துறுகற் போலப் போர்வேட்டு, வேறுபல் பூளையோ டுழிஞை சூடி" (பட். 231-5); "காழ்மண் டெஃகங் களிற்றுமுகம் பாய்ந்தென, ஊழ் மல ரொழிமுகை யுயர்முகந் தோயத், துறுகல் சுற்றிய சோலை வாழை", "களிறுமலைந் தன்ன கண்கூடு துறுகல்" (மலைபடு. 129 - 31, 384); "குறுங்கா லிற்றிப் புன்றலை நெடுவீழ், இரும்பிணர்த் துறுகற் றீண்டி வளிபொரப், பெருங்கை யானை நிவப்பிற் றூங்கும்" (அகநா. 57 : 6 - 8.)

4. தலைவியின் நோய்: (குறுந். 224 : 3, 400 : 7); "ஆற்றன்றே யடவிவ ளணிவாட", "நோய்மலி நெஞ்சமொ டினைய ரேழி", "நோயட வருந்தியும்" (கலித். 17 : 9, 27 : 22, 44 : 14.)

தலைவன் நோய் தருதல்: "உள்ளுருஞ் சிந்தைநோ யெனக்கே தந்து" (திவ். திருநெடுந்தாண்டகம், 23)

5. **கண் பசலையார்தல் :** "காமங் கொல்லிவள் கண்பசந் ததுவே", "நெய்த லுண்கண் பைதல் கூர", "கண்ணுந் தோளுந் தண்ணறுங் கதுப்பும், பழநல மிழந்து பசலை பாய" (நற். 35 : 12, 113 : 7, 219 : 1 - 2); "பூப்போ லுண்கண் பொன்போர்த் தனவே", "உண்கண் பசப்ப தெவன்கொ லன்னாய்", "ஏதி லாளர்க்குப் பசந்தவென் கண்ணே", "கயலெனக் கருதிய வுண்கண், பயலைக் கொல்கா வாகுதல் பெறினே", "நயந்தோ ருண்கண் பயந்துபனி மல்க", "பசப்பணிந் தனவான் மகிழ்நவென் கண்ணே", "என்செயப் பசக்குந் தோழியென் கண்ணே", "பல்லித முண்கண் பசத்தன்மற் றெவனோ", "பயந்தன மாதோநீ நயந்தோள் கண்ணே", "பனிமலர் நெடுங்கண் பசலை பாய", "கொன்றைப் பூவிற் பசந்த வுண்கண்" (ஐங். 16 : 4, 21 : 4, 34 : 4, 36 : 4-5, 37 : 2, 45 : 4, 169 : 5, 170 : 4, 264 : 4, 477 : 1, 500 : 1); "பல்லிதழ் மலருண்கண் பசப்ப", "பொன்னெனப் பசந்தகண் போதெழி னலஞ்செல" (கலித். 45 : 11, 77 : 12); "கண்பசந்து" (அகநா. 146 : 11); "முயக்கிடைத் தண்வளி போழப் பயப்புற்ற, பேதை பெரு மழைக் கண்", "கண்ணின் பசப்போ" (குறள், 1239 - 40); சீவக. 231.

4 - 5. **தலைவனால் நோயும் பசலையும் உண்டாதல் :** "ஆய் மல ருண்கண் பசப்பச், சேய்மலை நாடன் செய்த நோயே" (ஐங். 242 : 4-5); "அரிமத ருண்கண் பசப்பநோய் செய்யும், பெருமான்" (கலித். 82 : 20-21); "சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறு, நோயும் பசலையுந் தந்து" (குறள், 1183); "பயப்பூரச், சங்காட்டந் 'தவிர்த் தென்னைத் தவிராநோய் தந்தானே" (தே. திருஞா. திருச்செங்காட்டங்குடி.)

(13)

## தலைவன் கூற்று

[பாங்கியினாற் குறைமறுக்கப்பட்ட தலைவன், "என்னைத் துன்புறுத்தியவள் இன்னாளென்பதை யாவரும் அறிந்து கூறும்படி மடன்மாவூர்ந்து மறுகிற் செல்வேன்" என்று அப்பாங்கி கேட்பக் கூறியது.]

**14.** அமிழ்துபொதி செந்நா வஞ்ச வந்த
வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி [யரிவையைப்
பெறுகதில் லம்ம யானே பெற்றாங்
கறிகதில் லம்மவிவ் வூரே மறுகில்
நல்லோள் கணவ னிவனெனப்
பல்லோர் கூறயா நாணுகஞ் சிறிதே.

எ - து. "மடன்மா கூறு மிடனுமா ருண்டே" (தொல். களவு. 11) என்பதனுல் தோழி குறைமறுத்துழித் தலைமகன், மடலேறுவ லென்பதுபடச் சொல்லியது.

[குறை - காரியம்; தலைவனைத் தலைவி ஏற்றுக் கொள்ளச் செய்தல். பட - குறிப்பிஞற் புலப்பட.]

தொல்கபிலர்.

(பி - ம்.) 1 'அமிர்துபொதி,' 'வஞ்சி' 4-5 'மறுகு நல்லோர்' 6 'கூறுகயாஅ நாணுகஞ்', 'கூறயாநண்ணுகஞ்'

(ப - ரை.) அமிழ்து பொதி - அமுதத்தின் இனிமை நிரம்பிய, செ நா - செவ்விய நாவானது, அஞ்ச - அஞ்சும்படி, வந்த - முளைத்த, வார்ந்து இலங்கு - நேராகி விளங்குகின்ற, வை எயிறு - கூர்மையாகிய பற்களையும், சின்மொழி - சிலவாகிய சொற்களையும் உடைய, அரிவையை - தலைவியை, யான் பெறுகதில் - நான் மடன்மா ஏறுதலாற் பெறுவேனுக; பெற்ருங்கு - பெற்றபின்பு, இ ஊர் - இந்த ஊரிலுள்ளார், அறிகதில் - அறிவாராக; பல்லோர் - பலர், மறுகில் - வீதியில், நல்லோள் கணவன் இவன் என கூற - இந்நல்லாளுடைய தலைவன் இவனென்று சொல்லாநிற்க, யாம் சிறிது நாணுகம் - நாம் சிறிது நாணுவேம்!

(முடிபு) யான் பெறுக; ஊர் அறிக; பல்லோர் கூற யாம் நாணுகம்!

(கருத்து) யான் மடலேறுவேன்.

(வி - ரை.) அமிழ்தென்றது எயிற்றில் ஊறிய நீரை. அமிழ்து பொதி எயிறு, வந்த எயிறு எனக்கூட்டுக. பற்கள் கூரியனவாதலின் நா அஞ்சியது; அஞ்சினமையின் அது சில மொழி கூறியது. அரிவையென்றது பருவங்குறியாமற் பெண்ணெனுந் துணையாய் நின்றது, "செறியெயிற் றரிவை" (குறுந். 2 : 4) என்புழிப்போல. தில் விழைவுப்பொருளில் வந்தது. சின்மொழி - சிலவாகியமொழி (கலித். 29 : 10, ந.); மென்மொழி (பழ. 226, உரை) என்றும், மெத்தென்றமொழி (புறநா. 166 : 16, உரை) என்றும் கூறுவார் உளர். யாமென்றது தலைவியையும் உளப்படுத்தி. மடலேறத் தொடங்கும்போது நாணத்தை முற்ற நீத்தவனுதலின், 'சிறிது நாணுகம்' என்ருன்.

தலைவன் தன்னுடைய உருவத்தையும் தலைவியினது உருவத்தையும் எழுதியமைத்த படத்தைக் கையிலேந்தி மடன்மாவிலேறி மறுகிற் செல்வானுதலின், அந்நிலை, இன்னுள் கணவன் இவனென்று ஊரினர் அறிதற்கு ஏதுவாயிற்று.

**(மேற்.)** 2. வார்தலென்னும் உரிச்சொல் நேர்தலென்னும் பொருளில் வந்தது (தொல். உரி. 23, தெய்வச். 19, ந; இ. வி. 284)

3. விழைவின் தில் தன்மையிடத்திற்குரியது (தொல். இடை. 12, இளம்.); ககர உயிர்மெய், வியங்கோள் வினைமுற்று விகுதியாகவரும் (நன். 337, மயிலை, 338, சங்.; இ. வி. 239). 2 - 3. தில்லென்னும் இடைச்சொல் விழைவின்கண் வந்தது (தொல். இடை. 5, இளம், சே, கல், தெய்வச், ந; நன். 430, மயிலை, 431, சங்.)

3 - 4. தில்லென்னும் இடைச்சொல் காலம் பற்றி வந்தது (தொல். இடை. 5, இளம், சே, கல்; நன். 430, மயிலை, 431, சங்.; இ. வி. 264) 2 - 4. தில் விழைவின்கண் வந்தது (இ. வி. 264)

**(ஒப்பு.)** 2. **வார்ந்திலங்கு வையெயிறு:** "வையெயிற்று, வார்ந்த வாயர்" (மதுரைக். 413 - 4); "வாஅர்ந் திலங்கு வாலெயிற்று" (நற். 198 : 7)

**வையெயிறு:** நற். 26 : 7; அகநா. 325 : 11. **சின்மொழி:** "சிலமெல் லியவே கிளவி" (குறுந். 70 : 4); "சின்மொழித் துவர்வாய்" (நற். 190 : 9); "சின்மொழி" (கலித். 29 : 10, 125 : 16, 132 : 13); "முள்ளெயிற்றுச், சின்மொழி யரிவை" (அகநா. 361 : 13 - 4); "சில சொல்லிற் பலகூந்தனின், நிலைக்கொத்தநின் றுணைத்துணைவியர்" (புறநா. 166 : 16 - 7); "சின்மொழியார்" (நாலடி. 362); "முள்ளெயி றிலங்கச் செவ்வாய் திறந்து, சில்லென் கிளவி மெல்லென மிழற்றி" (பெருங். 4. 5 : 16 - 7); "சிற்றம் பலமன்ன சின்மொழியை" (திருச்சிற். 343); "திறமலி சின்மொழிச் செந்துவர் வாயினை" (திருவாரூர் மும் மணிக். 24); "சின்மொழி" (திவ். திருவிருத்தம், 19 - 20)

1 - 2. **அழிழ்து பொதி எயிறு:** "முள்ளெயிற், றமிழ்த மூறுஞ் செவ்வாய்" (குறுந். 286 : 1-2); "முள்ளூறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரை", "ஊறுநீ ரமிழ்தேய்க்கு மெயிற்றாய்" (கலி. 4 : 13, 20 : 11); "கூரெயிற், றமிழ்த மூறுஞ் செவ்வாய்" (அகநா. 335 : 24 - 5); "முத்துக்கூர்த் தன்ன முள்ளெயிற் றமுதம்" (மணி. 18 : 72); "அமர ராக்கிய வமிழ்தெனக் கிளையோள், தன்முளை யெயிற்றுநீர் தானென வயின்றும்" (பெருங். 3. 14 : 162 - 3); "முள்வா யெயிற்றூறமுதம்" (சீவக. 491). நா எயிற்றை அஞ்சுதலும் சில மொழிதலும் "நல்கி ளவஞ்சு முள்ளெயிற்று மகளிர்" (புறநா. 361 : 16); "கூரெயிறு நாப் போழ்தலஞ்சியஞ்சி, உழுன்மாலைத் தீங்கிளவி யொன்றிரண்டு தான்மிழற்று மொருநாட் காறும்" (சீவக. 1353)

3. **பெறுகதில்லம்ம:** "பெறுகதில் லம்மவிவ் வூருமோர் பெற்றி" (சிலப். 24 : பாட்டுமடை.)

4 - 5. **மறுகில் மடலேறுதல்:** குறுந். 17 : 1 - 3, ஒப்பு.

4 - 6. **மடலேறும்போது தலைவனுக்குரிய தலைவியை ஊரினர் அறிதல்:** "இன்னள் செய்த திதுவென முன்னின், றவள்பழி நுவலு மிவ்வூர்" (குறுந். 173 : 5 - 6) (14)

## செவிலித்தாய் கூற்று

[தலைவி தமரைப் பிரிந்து தலைவனுடன் சென்றதைத் தோழியால் அறிந்த செவிலி, " நம் மகளும் அவள் அன்பனும் பாலையைக் கடந்து சென்று இதற்குள் மணம் புரிந்து கொண்டிருப்பர்; அதனால் அவர்களுடைய நட்பு உலகறிய உறுதி பெற்றதாகும் " என்று நற்றாய்க்குக் கூறியது.]

**15.** பறைபடப் பணில மார்ப்ப விறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாயா கின்றே தோழி யாய்கழற்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே.

எ - து. உடன்போயின பின்றைத் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள்; நிற்பச் செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நின்றது.

[உடன் போயின பின்றை - தலைவி தன் தமரைப்பிரிந்து தலைவனுடன் போனபின்பு. அறத்தொடு நிற்றல் - தலைவி இன்ன தலைவனுடன் நட்புப் பூண்டு சென்றாளென்ற உண்மையைக் கூறி அத்தலைவியின் கற்புக்குச் சார்பாக நிற்றல். நற்றாய் - தலைவியை ஈன்ற தாய்.]

ஔவையார்

(பி - ம்.) 3 ' நல்லூர்க் ' 6 ' தொடுவளை முன்கை நம் '

(ப - ரை.) தோழி—, ஆய்கழல் - அழகிய வீரக்கழலையும், செ இலை - செம்மையாகிய இலையையுடைய, வெள் வேல் - வெள்ளிய வேலையும் கொண்ட, விடலையொடு - தலைவனோடு, தொகு வளை முன் கை - பலவாகத்தொக்க வளைகளைப்பூண்ட முன் கைகளையுடைய, மடந்தை நட்பு - நின்மகள் செய்த நட்பானது, தொல் முது ஆலத்து பொதியில் - மிகப்பழைய ஆலமரத்தடியின் கண் உள்ள பொதுவிடத்தில், இறைகொள்பு தோன்றிய - தங்கு தலைக்கொண்டு தோன்றிய, நாலூர் கோசர் நன் மொழி போல - நான்கு ஊரிலுள்ள கோசரது நன்மையையுடைய மொழி உண்மையாவதைப் போல, பறை பட - முரசு முழங்கவும், பணிலம் ஆர்ப்ப - சங்கு ஒலிக்கவும், மணம் செய்தலால், வாய் ஆகின்று - உண்மை ஆகியது.

(முடிபு) விடலையொடு மடந்தை நட்பு வாயாகின்று.

(கருத்து) தலைவி தன் தலைவனுடன் சென்றனள்.

(வி - ரை.) பறையும் சங்கும் மங்கலநாளில் முழங்குவன : " மத்தளங் கொட்ட வரிசங்க நின்றூத, முத்துடைத் தாம நிரை தாழ்ந்த பந்தற்கீழ், மைத்துன னம்பி மதுசூதன் வந்தென்னைக், கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் றோழிநான் " (திவ். நாச்சியார். 6 : 6) என்பதிலும் மணத்தில் இவ்விரண்டும் கூறப்படுதல் காண்க ; பறையென்றது இங்கே தோற்கருவிகளைக் குறித்து நின்றது ; " பல்லா ரறியப் பறையறைந்து நாட்கேட்டுக், கல் யாணஞ் செய்து " (நாலடி. 86) என்புழிப்போல. பொதியில்= பொது இல் - அம்பலம் (முருகு. 226, ந.) பலர் கூடியிருத்தற் கேற்ற கிளைப்பரப்பும் நிழலுமுடைமையின் ஆலமரத்தின் அடியிலே அவைகூடுதல் பண்டை வழக்கமென்று தெரிகின்றது. " வெல்போ ரிராம னருமறைக் கவித்த, பல்வீ ழாலம் போல " (அகநா. 70 : 15-6) என்பதனாலும் அதன் உரையாலும் இதனை அறியலாகும். கோசர் : மோகூர்ப் பழையனுடைய நியாய சபையில் இருந்த ஒருவகை வீரர் ; இவர் நான்கு பிரிவினர்களென்று தெரிகின்றது (மதுரைக். 508-9, ந.) ; நாலூர் - ஓரூருமாம். விடலை - பாலைத்திணைக்குரிய தலைவன் பெயர்.

கொடுப்போரின்றியும் கரணம் நிகழ்வதுண்டாதலின், உடன் போக்கின்பின் இருவரும் மணம்புரிந்துகொள்வதனால் மடந்தையினது நட்பானது உலகறிய உண்மையாகுமென்றாள் செவிலி.

(மேற்.) மு. தலைவி தலைவனுடன் சென்றமையறிந்து தோழியோடு பொருந்திக் கற்பின் ஆக்கத்து நிற்றற்கண் செவிலிக்குக் கூற்று நிகழும் (தொல். களவு. 25, இளம்.) ; ' இதனுள் விடலையொடு மடந்தை நட்பு, பறைபடப் பணில மார்ப்ப இறைகொண்டு நாலூர்க் கோசர் நன்மொழி போல வாயாயிற்றெனச் செவிலி நற்றாய்க்குக் கூறினமையானும், விடலையெனப் பாலை நிலத்திற்குரிய தலைவன் பெயர் கூறினமையானும் கொடுப்போரின்றியும் கரணம் நிகழ்ந்தவாறு ' (தொல். கற்பு. 2, இளம், ந.; இ. வி. 528) ; உடன்போயினபின் செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்றது (தொல். களவு. 24, ந.) ; செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநின்றது (நம்பி. 185)

(ஒப்பு.) 3. கோசர் : குறுந். 73 : 4 ; புறநா. 169 : 9, அடிக். 2-3. ஆலம் பொதியிற் கோசர் : " துனைகா லன்ன புனைதேர்க் கோசர், தொன்மூ தாலத் தரும்பணைப் பொதியில் " (அகநா. 251 : 7-8) ; " வலம்புரி கோச ரவைக்களத் தானும் " (புறநா. 283 : 6.)

4. ஆகின்று : குறுந். 166 : 4, 248 : 3, 258 : 2, 271 : 5, 394 : 7. 3-4. கோசர்மொழி உண்மையாதல் : " வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை, வளங்கெழு கோசர் " (அகநா. 205 : 8-9)

